4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 6 5 73 ஞாயிறு (மலர் 105

### நீதிபதியை நியமித்தது சரிதானும்

### சர்வாதிகாரப் போக்கிற்கு சபைக்கட்டு

கொச்சி, மே. 4—

சுப்ரீம் கோர்ட் நீதிபதியைத் தாம் நியமித்தது சரிதான் என்றும், ஜனநாயகத்தையும், மக்கள் உரிமைகளையும் காப்பதற்காகவுமே, தான் அவ்வாறு செய்ததாகவும் பிரதம மந்திரி இன்று கொச்சியில் கூறினர்.

இன்று ஜனநாயகத்துக்கு ஏற்பட்டுள்ள ஆபத்து அரசின் போக்குகளால் அல்லவென்றும் மக்கள் மீது நம்பிக்கையற்றவர்களால்தான் என்றும் தன்னுடைய பொன்மொழிகளை உதிர்த்தார்.

### துண்டை உதறி தோளில் போட்டுக்கொண்டு போவாராம்

### அமைச்சர் அறிவிப்பு

"எது எப்படியாயினும் இன்னும் 3-ஆண்டுகளுக்கு அரசு நடக்கும். அதன் பின்னல் விரும்பினல் இருக்கிறோம் மறுத்தால் துண்டை உதறி தோளில் போட்டுக்கொண்டுவிவசாயத்தைக் கவனிக்கப்போகிறோம்" அமைச்சர் என் வி. நடராசன் பேசியது.

— நவமணி
3—5—73.

# பிரதம நீதிபதி நியமனம் பற்றி மார்க்சிஸ்ட் கட்சி தலைமைக் குழு அறிக்கை

**கல்கத்தா, மே-5**

**இந்தியாவின் பிரதம நீதிபதி நியமனம் சம்பந்தமாக எழுந்துள்ள தகராறு பற்றி, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் பொலிட் பீரோ, பின்வரும் அறிக்கையினை வெளியிட்டுள்ளது:**

இந்தியாவின் பிரதம நீதிபதியாக திரு. ராய் அவர்களை இந்திய அரசாங்கம் நியமித்துள்ளதையடுத்து—இந்தியாவெங்கும் பெரும் வாதப் பிரதிவாதங்கள் ஏற்பட்டுள்ளன. மூன்று சீனியர் நீதிபதிகள் இருக்கும் போது, அவர்களையெல்லாம் தள்ளிவிட்டு, ராயை நியமித்ததானது, உயர்நீதி மன்றங்களிலும், சுப்ரீம் நீதிமன்ற வழக்கறிஞர் சங்கத்திலும், மற்றுமுள்ள ஜனநாயக வட்டாரங்களிலும் கடும் கண்டனப் புயலைக் கிளப்பி விட்டிருக்கிறது.

### ஆளும் கட்சிக்கு ஏற்ற அரசியல் நியமனம்

இந்த நியமனமானது, ஆளும் கட்சிக்கு சேவை செய்வதில் நீதித்துறையிலும் ஒத்து இசைந்து போவதற்கான நியமனமாகும்என்றும — இது ஓர் அரசியல் நியமனம் என்றும், சரியாகவே புரிந்துகொள்ளப்பட்டு, தாக்கப்படுகிறது.

இதுபற்றி ஆளும் கட்சி கூறும் நியாயம் என்ன? நீதிததுறையின் மீது நாடாளுமன்றத்தின் மேலாதிக்கத்தையும், மக்களின் மேலாதிக்கத்தையும் நிலைநாட்டுவதாக ஆளும் கட்சியினர் கூறுகிறார்கள். இது ஒரு சுத்த 'ஹம்பக்' என்றே கூறுவோம்.

### மக்கள் சபையைக் கண்டு நடுக்கம் ஏன்?

ஆளும் கட்சிக்கு நாடாளுமன்றத்திலே பூரண மெஜாரிடி இருக்கும் போது, அங்கு இப்பிரச்னையைக் கொண்டுபோய் வைத்து— "ஒரு ஜூனியர் நீதிபதியை பிரதம நீதிபதியாக நியமித்ததற்குக் காரணம் என்ன என்று விளக்கம் கூற தைரியம் இல்லாமற் போய்விட்டது. ஆளும் கட்சிக்குப் பயம் ஏற்பட்டு விட்டது. ஜனநாயகத்தின் எதிர்ப்பு வருமே, தமது சொந்த ஒருதலைப்பட்சமான உள்நோக்கமெல்லாம் வெட்ட வெளிச்சமாகி விடுமே என்று பீதி அடைந்துள்ளது.

நீதிபதிகளின் தாறுமாருன தீர்ப்புகளிலிருந்து மக்களின் ஜனநாயக உரிமைகளையும், மக்களின் அடிப்படை சுதந்திரங்களையும் பாதுகாப்பதற்குதான் இப்படிப்பட்ட நடவடிக்கை எடுத்திருப்பதாக அரசாங்கத் தரப்பில் கூறப்பட்டாலும், உண்மை அது அல்ல. இந்திய அரசியல் சட்டத்தில் உள்ள ஜனநாயக விதிகளையும், கட்டளைகளையும் மீறி— ஒரு தடவை அல்ல, இரு தடவை அல்ல, பலதடவைகளில் திரும்பத் திரும்ப மீறி—இந்திரா காங்கிரஸ் நடந்திருக்கிறது என்பது நாடறிந்த விஷயமாகும்.

### அடக்குமுறைச் சட்டங்கள்

மக்களை நசுக்கவேண்டுமென்பதற்காகவே நெருக்கடி நிலை பிரகடனங்களை அப்படியே வைத்துக் கொள்ளுகிருர்கள். இந்திய அரசியல சடடத்தில் வழங்கப்பட்டுள்ள குறுகிய சுதந்திர உரிமைகளைக்கூட, பறித்து விடுவதற்காகவே இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தைநீடித்துக்கொண்டேயிருக்கிருர்கள். இவற்றிலும் திருப்திகொள்ளாமல், அபகீர்த்திவாய்ந்த அந்த உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டத்தையும் ஏற்படுத்திக்கொண்டார்கள். மககளுடைய ஒவ்வொரு உரிமையையும் பறித்து, மக்களை இஷ்டம்போல் நசுக்குவதற்கு அதிகார வர்க்கத்துக்கு பச்சை விளக்குக் காட்டக் கூடிய "வன்முறைத் தடுப்புச் சட்டம்"—என்ற கேடு கெட்ட சட்டத்தையும் போட்டு வைத்துக்கொண்டார்கள். வேலை நிறுத்தங்களை சட்ட விரோதமாக்குவதற்கும் அதிகாரத்தை வைத்துக் கொண்டார்கள். அதனுடைய ஒரு மாநில அரசான மேற்கு வங்க அரசு, மக்கள் மீதும் -தொழிலாளர் மீதும் பயங்கர ஆட்சியை ஏவி விட்டிருக்கிறது.

### கவர்னர்கள் மூலம்

இத்துடன் கூடவே, மத்திய அரசானது தனது மாநில கவர்னர்கள் மூலமாக, சட்டமன்றங்களின் விருப்பத்தையே கேட்காமல் மந்திரிசபை அமைக்க மாற்றுக் கட்சிகளுக்கு வாய்ப்புகூட கொடுக்காமல், ஜனநாயகத்தைப் படுகொலை செய்தார்கள் என்பதும் நாடறிந்த விஷயமேயாகும்.

### சொந்த ஆளை நியமித்த சூழ்நிலை என்ன?

பிரதம நீதிபதி பதவிக்கு தனக்கு இஷ்டப்பட்டவரை அரசு நிர்வாகம் போட்டுக் கொள்ளும் சூழ்நிலையானது எப்படிப்பட்ட சூழ்நிலை என்பதைப் பார்ப்போம். மேற்கு வங்கத்தில் பயங்கர ஆட்சி நடக்கின்ற சூழ்நிலையில்—அங்கே பிரஜா உரிமைகளெல்லாம் பறிக்கப்பட்டுள்ள சூழ்நிலையில்-மோசடித் தேர்தலும் நடந்துள்ள சூழ்நிலையில்-சொந்த ஆளை பிரதம நீதிபதியாக நியமித்திருக்கிருர்கள். ஆகவே, இந்த நடவடிக்கையை, ஒரு கட்சி ஆட்சியை நிலை நாட்டுவதற்காக எடுக்கப்பட்டுள்ள மற்றுமொரு நடவடிக்கை என்றே கருத வேண்டும். அதாவது, அரசாங்கத்தின் மீது ஒரு கட்சியின்பிடிப்பை இறுக்குகிருர்கள் என்றே கருத வேண்டும்.

### சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் சுயேச்சைகளா?

நாம் இப்படிச் சொல்லுவதால், இத்தனை ஆண்டு காலமும் இந்த சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் சுயேட்சையாகவே நடந்து வந்திருக்கிருர்கள்என்றே, அரசு நிர்வாகத்துக்கு கடிவாளம் போட்டார்கள் என்றே அருத்தம் அல்ல. சுப்ரீம் கோர்ட்டும் சரி, சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளும் சரி சுருக்கமாகச் சொன்னல், இது போன்ற காரியங்களில் எதுவுமே செய்வதில்லை.

இந்த நாட்டில் சாதாரண மக்கள், இந்த சுப்ரீம் கோர்ட்டைப் பற்றி, நல்ல அபிப்பிராயம் கொள்ளுவதில்லை. தங்களுடைய உரிமைகளையும் சுதந்திரங்களையும் தாக்குகின்ற அரசாங்க நிாவாகத்தைத் தடுத்துப் பாதுகாக்கும ஒரு கேடயமாக இந்த சுப்ரீம கோர்ட்டை நாடடு மக்கள் கருதுவது இல்லை. எவ்வளவோ காலமாக இப்படித்தான் நினைக்கிருர்கள்.

### பேய்ச் சட்டங்களை ஏந்திப் பிடித்தவர்கள்

இத்தனை காலமும் இந்த சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் என்ன செய்தார்கள்? படுமோசமான உள்நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்பு சட்டம் வநதபோது, பொதுவாக அதற்கு முத்திரை வைத்தவாகள் இந்த நீதிபதிகள் தானே! இநதியப் பாதுகாப்புச் சட்டத்தைக கொண்டு, மக்களின உரிமைகளைத தாக்கியபோதும், அந்தச் சடடத்தை ஏநதிப் பிடிததவர்களும் இந்த நீதிபதிகள் தானே! தடுப்புக் காவல் ஆள் தூக்கிச சட்டம் வந்தபோதும் அதைக் தாங்கிப் பிடித்தவர்களும் இந்த நீதிபதிகள் தானே! இந்தச் சட்டங்களிலுள்ள பல ஷரத்துக்களும், அரசியல் சட்டத்துக்குப் புறம்பான படுமோசமான ஷரத்துக்களாக இருப்பதைக் கண்ட பின்னரும் கூட- அதாவது உள்நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்பு சட் சட்டத்தின் 17. ஏ. செக்ஷன் படுமோசமானது எனத் தெரிந்திருந்தும் கூட— வழக்கம் போல் அரசாங்கத் தரப்பில் கூறப்படும் "சட்டமும் ஒழுங்கும்" என்ற சாக்கை ஏற்றுக் கொண்டு, அதைத் திருத்திக் கொள்ளுவதற்கு அரசு நிர்வாகத்துக்கு அவகாசமும் கொடுத்தார்கள். இதில் தங்களுடைய நடுநிலைமைக் கட்டுக்கோப்பையும் மீறிநடத்துகொண்டார்கள். மக்களுடைய உரிமைகளை அரசு நிர்வாகம் தாக்குகின்றபோது அந்தத் தக்க்குதலைத் தடுப்பதில் இந்த நீதிபதிகள் தோல்வியே கண்டனர்.

### பத்தாம் பசலிகள்

கெரோ போராட்டங்களைப் பறறியும், சாதாரண விவசாயச் சட்டங்களைப் பற்றியுமுள்ள பிரச்னைகளெல்லாம் உயர்நீதி மன்றங்களுக்கு வந்த காலத்தில், உயர்நீதி மன்ற நீதிபதிகள் எப்படிப்பட்ட தீர்ப்பு அளித்தார்கள் என்பதை நாம் அறிவோம். நாட்டு மக்களின் கோரிக்கைகளுக்கும் உணர்வுகளுக்கும் ஈடு கொடுத்துப் போகாமல், எவ்வளவு பின் தங்கி நின்ருர்கள் என்பதையும்—சட்டங்களுக்குவியாக்யானம் செய்தபோது, பத்தாம் பசலி வியாக்யானமே செய்தார்கள் என்பதையும் தெட்டத்தெளிவாகஅறிந்து கொண்டோம்.

### சொத்து உறவுகள்

1967-ம் ஆண்டிலே, "அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகளைத் திருத்துவதற்கு நாடாளுமன்றத்துக்கு உரிமை கிடையாது" என்று சுப்ரீம் கோர்ட் ஒரு தீர்ப்பு மூலம் பிரகடனம் செய்தது, அன்று கோர்ட்டின் முன்னல் வந்த உண்மையான பிரச்னை,தனிப்பட்டவர் சுதந்திரம் பற்றிய பிரச்னை அல்ல. சொத்துரிமை பற்றிய பிரச்னையாகும். அந்தத்தீர்ப்பின் நடைமுறை விளைவானது எதில் கொண்டு போய் விட்டது? இப்போதுள்ள சொத்து உறவுகளைத் தீவிரமாக மாற்றுவதற்கு நாடாளுமன்றத்தால் முடியாது என்பதிலும் — பெரும் சொத்துடைமைக்காரர்களுக்கு பெரிய அளவு

(4-ம பக்கம் பார்க்க)

### மாதவனின் இந்திரா பக்தி

திண்டுக்கல், மே. 5—

திண்டுக்கல்லில் காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் வேட்பாளர் சீமைச்சாமி முன்பு இந்திராவை எதிர்த்தவராம்.

காங்கிரஸ் பின்பற்றும் கொள்கைக்காக அவரை மந்திரி மாதவன் எதிர்க்கவில்லை. இந்திராவை எதிர்த்தவராம். அதனல் சீமைச்சாமிக்கு ஓட்டுப் போடக் கூடாது என்று சின்னளபட்டியில் நடந்த பொதுக் கூட்டத்தில் அமைச்சர் மாதவன் பேசியிருக்கிருர்.

சீமைச்சாமி முன்பு இருந்த கட்சி சுதந்திரா கட்சி.

இன்னெரு கட்சியிலிருந்தபோது அவர் இந்திராவை எதிர்த்துகூட அமைச்சர் மாதவனுக்குப் பொறுக்கவில்லை.

1971-ம் ஆண்டில் சட்டசபையில் சீமைச்சாமி இந்திராவை எதிர்த்துப் பேசியதை மேற்கோள் காட்டியிருக்கிருர்.

"ஜனநாயகத் தொட்டிலில் வளர்த்த இந்திரா" என்று கருணநிதியைப் போல்என்றும் எந்தக் கட்சியிறுருந்தாலும் இந்திரா பஜனைபாடவேண்டும்என்று விரும்பும் மாதவனின் பக்தி தான் என்னே?

# அ.தி.மு.க. ஊழியர் படுகொலை

## தி. மு. க. ரவுடியின் வெறிச்செயல்

**வத்தலக்குண்டு, மே. 4—**

**இங்குள்ள அண்ணு தி. மு. க. ஊழியர் ஆறுமுகம் என்பவர் நேற்று (வியாழன்) நள்ளிரவில கத்தியால் குத்திக் கொலை செய்யப்பட்டார்.**

ராமன், வேலுச்சாமி என்ற இரு தி. மு. க. ரவுடிகளே இந்தப் படுகொலையைச் செய்ததாகக் கூறப்படுகிறது.

படுகொலை செய்யப்பட்ட திரு. ஆறுமுகம், வத்தலக்குண்டு அ. தி. மு. க. துணை அமைப்பாளராவார்.

இவர் திண்டுக்கல் நாடாளுமன்றத் தேர்தலில் அ தி மு க வேட்பாளருக்கு ஆதரவாக தீவிரமான பணியில் ஈடுபட்டிருந்தார்.

இந்தப் படுகொலைச் செய்தியறிந்தவுடன்மதுரையிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம், அ தி மு க தலைவர்கள் திருவாளர்கள் எஸ். டி. சோமசுந்தரம், கே. ஏ. கிருஷ்ணசாமி, நாஞ்சில் மனேகரன் ஆகியோர் ஸ்தலத்திற்கு விரைந்து வந்து சேர்ந்தனர்.

பிற்பகலில் நடந்த இறுதி ஊர்வலத்தில் ஏ. பாலசுப்ரமண்யம், கே. ஏ. கிருஷ்ணசாமி, எஸ். டி. சோமசுந்தரம், நாஞ்சில் மனேகரன், வலது கம்யூனிஸ்ட் சார்பில் திரு. எஸ்.ஏ. முருகானந்தம் மற்றும்சிண்டிகேட் இந்திரா காங்கிரஸ் முதலிய கட்சிகளின் தலைவர்களும் பல்லாயிரக்கணக்கான பொது மக்களும் கலந்துகொண்டு அஞ்சலி செலுத்தினர்.

இந்தப் படுகொலை சம்பந்தமாக போலீஸ் வழக்கு பதிவு செய்துள்ளனர். கொலை செய்ததாக கூறப்படும் ராமன், வேலுச்சாமி என்ற அந்த இரு ரவுடிகளையும் போலீசார் தேடி வருகிருர்கள்.

கொலை வெறிக்குப் பலியான ஆறுமுகத்துக்கு இளம் மனைவியும், ஒரு குழந்தையும் உள்ளனர். மனைவி 3 மாதம் கர்ப்பிணி.




## தி. மு. க. வை முறியடிப்போம்

"காங்கிரஸ் காலத்தில் அவர்களுக்கு (கமயூனிஸ்டுகளுக்கு) ஏற்பட்ட தொல்லைகளுக்குக் கண்டனம் தெரிவித்து பாதுகாப்புக்கொடுத்துள்ளோம் ...கம்யூனிஸ்ட்கட்சிக்கு நன்றியிருக்குமானல் திண்டுக்கல் தேர்தலில் தி. மு. க.வைத்தான் ஆதரிக்க வேண்டும்"என்று பேசியிருக்கிருர் அமைச்சர் என். வி. நடராசன்.

(நவமணி மே 3-ம் தேதி)

தொழிலாளர் போராட்டங்கள் வெடித்த சமயங்களில் எல்லாம காங்கிரஸ் ஆட்சியில் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடந்த இடங்கள்.

∴ பொன்மலை

∴ வால்பாறை

∴ சென்னை என்று பட்டியல் நீளும்.

தி. மு. க. ஆட்சி வந்ததும் இந்தப் பட்டியல் நின்றதா?

∴ திருவெற்றியூர்

∴ அரவங்காடு

∴ நெய்வேலி

∴ பெரம்பூர்

என்று பட்டியல் நீளவில்லையா?

காங்கிரஸ் ஆட்சியிலும் கருப்புச் சட்டம் தொழிலாளர் தலைவர்களை சிறைக்குள் தள்ளியது.

தி. மு. க. ஆட்சியிலும் கருப்புச் சட்டம் சிங்தன், பரமேஸ்வரன், அரிபட் ஆகிய தொழிலாளர் தலைவர்களை விசாரணையின்றி சிறைக்குள் தள்ளினர்.

காங்கிரஸ் ஆட்சியிலும் இரணியன் சிவராமன் போன்ற எண்ணற்ற தியாகிகள் ஈவிரக்கமின்றி சுட்டுத்தள்ளப்பட்டனர்.

தி. மு. க. ஆட்சியிலும் வெண்மணித் தியாகிகள் உயிருடன் கொளுத்தப்பட்டனர்.

காங்கிரஸ் ஆட்சியிலும் வேலைநிறுத்தத்துக்குத் தடை.

தி, மு. க. ஆட்சியிலும் தடை.

தி. மு. க. அமைச்சர்களே உங்கள் பாதை காங்கிரஸ் பாதையா?

அல்லது மாற்றுப் பாதையா? இல்லை! இல்லவே இல்லை!

அதனல்தான் இண்டிகேட், சிண்டிகேட் மட்டுமல்ல தி. மு. க, வையும் முறியடிப்பது நமது பணியாகி விட்டது.

## கண்ணாடி மாளிகை இந்திரா மஹால் ஆகிறது!

### மக்களது வரிப்பணம் பாழ்!

பெங்களூர், மே. 5—

இந்த வாரத்தில், இந்திரா காங்கிரஸ் கட்சியினர் பெங்களூர் நகரத்தில் குட்டி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடத்தப் போகிருர்களாம். இதற்கு எவ்வளவு செலவிடப்போகிருர்கள் தெரியுமா?

குறைந்தது ரூ. 10 லடசம் தாளும். இது மட்டுமல்ல.

மேலும் அ. இ. கா. க. கூட்டம் நடைபெறும் "லால் பாக் கண்ணடி மாளிகை"யை "இந்திராமஹால்" ஆகவும் ஆக்கப்போகிருர்களாம்.

இதெல்லாம் யாருடைய பணம? மைசூர் மாநில அரசாங்கத்தின் பணம்.மக்களை கசக்கிப் பிழிந்த வரிப்பணம்.

## திமுக தேர்தல் ஜீப் மோதி இருவர் பலி

திண்டுக்கல். மே. 4—

திண்டுக்கல் உபதேர்தல் பிரச்சாரத்திற்காக சென்ற தி மு. க. பிரச்சார ஜீப் ஒன்று நேற்று (வியாழன்) காலை வெற்றிலை பாக்கு கடையில் மோதியதால் கடை வியாபாரி சுப்பையா பிள்ளை அந்த இடத்திலேயே இறந்தார். இச்சம்பவம் இங்கிருந்து 6 மைல் தூரத்திலுள்ள ஜம்புலீயபட்டியில் நடைபெற்றது.

திண்டுக்கல் பஞ்சாயத்து யூனியன் தலைவரும் இந்த ஜீப்பில் இருந்ததாகக் கூறப்படுகிறது. காயம் அடைந்த மற்றவர்கள் அரசு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

ஏற்கனவே, இத்தொகுதியில் அமைச்சர் நெடுஞ்செழியன் சுற்றுப்பயணம் செய்தபோது, திண்டுக்கல் தி, மு, க. நகரசபைத் தலைவர் பொன். சீனிவாசனின் கார் மோதி லிங்கப்ப நாயுடு என்ற தொழிலாளி ஒருவர் பரிதாபமாக இறந்தார்.

## வறட்சிப்பணித் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் தொடக்கம்

கோலாப்பூர், மே. 4—

கோலாப்பூர் பகுதிகளில், வறட்சி நிவாரணப் பணிகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் அனைவரும் வேலை நிறுத்தம் செய்வது என்று முடிவு செய்துள்ளனர்.கூலி உயர்வு, உணவு ரேசன், சிறந்த வேலை நிலைகள் முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தி இந்த வேலை நிறுத்தத்தில் இறங்குகிருர்கள்.

மே 16ந்தேதிமுதல் வேலை நிறுத்தம் தொடங்குகிறது.

வறட்சி நிவாரணத் தொழிலாளர்களின் இந்த வேலை நிறுத்தத்துக்கு ஆதரவாக அன்று முதல் இண்டஸ்ட்ரியல் தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் தொடங்குகிருர்கள்.

கிராம அதிகாரிகளும், கூட்டுறவுச்சங்கச் செயலாளர்களும் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக மே. 16 முதல் வேலை நிறுத்தம் தொடங்குகிருர்கள். மே 1-ந்தேதி நடந்த பேரவைக் கூட்டத்தில் இந்த முடிவு எடுக்கப்பட்டது.

தீக்கதிர்

# ஏழை மக்களைக் காட்டி அரசு ஊழியர்களை மட்டம்தட்டினீர்

## ரவுடியிசத்தைக் கைவிடுக நேர்மையான தேர்தல் நடத்துக

ஜனநாயக முறையில் திண்டுக்கல் தேர்தலை நடத்த தி. மு. க வினர் விரும்பவில்லை.

இந்தத் தேர்தலில் அவர்களது நிலை கேள்விக் குறியாகிவிட்ட பிறகு அடாத செயல்களில் ஈடுபட ஆரம்பித்துவிட்டார்கள்.

உசிலம்பட்டியில் திரு. எம். ஜி ஆர். பேசவிருந்த அ. தி. மு. க. கூட்டத்தில் தி. மு. க வினர் கல்லெறிந்தும் ஒலிபெருக்கிக் கம்பங்களை வீழ்த்தியும் ரவுடிசனம் செய்துள்ளனர். அங்கு சென்ற பத்திரிகையாளர் மீதும் கல்லெறிந்துள்ளனர்.

இத்தகைய காட்டுமிராண்டித் தனத்தால் 50 பேர் படுகாயமடைந்தனர்.

இதே போல் வத்தலக்குண்டில் திரு. மதியழகன் பேசுவதற்காக கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்த அ. தி. மு. க. ஊழியர் ராஜேந்திரனை, சில தி. மு. க. ரவுடிகள் தாக்கி, அவரை குற்றுயிரும் குலை உயிருமாக்கிய நிலையில் போட்டுவிட்டு சென்றுள்ளனர். இந்தத் தொண்டரின் உயிர் இன்று மதுரை மருத்துவ மனையில் ஊசலாடிக்கொண்டிருக்கிறது.

ஆறுமுகம் என்ற அ. தி. மு. க. ஊழியர் படுகொலை செய்யப்பட்டுள்ளார்.

தி. மு. க வினரின் இத்தகைய வெறித்தனம் அவர்களது தேர்தல் தோல்வி பீதியிலிருந்து எழுகிறது. தங்களது ஆறுண்டுகால கொடுங்கோலாட்சியின் விளைவாக இந்த நாட்டு அவர்களுக்கு எதிராக திரண்டு வரும்போது இத்தகைய அராஜக வன்முறைகளால் தங்களது தோல்வியை வெற்றியாக்கிவிட முடியும் என்று நினைப்பது வெறும் பகற்கனவாகும்.

காமராசரும் பக்தவச்சலனாரும் சென்றகாலத்தில் இதைத்தான் செய்தார்கள். போலீஸ் வெறியாட்டமும், காங்கிரஸ் ரவுடிசமும் எதிர்க்கட்சிகளின் மீது கட்டவிழ்த்துவிடப்பட்டன. இதனால் அவர்கள் வெற்றியடையவில்லை என்பது தி மு க வினர் அனுபவபூர்வமாக அறிந்த உண்மை.

ஆனால், அதிகாரத்திலமர்ந்த ஒவ்வொரு முதலாளித்துவக் கட்சியும் தமக்கு எதிராக சென்ற காலத்தில் தொடுக்கப்பட்ட அடக்கு முறைகளை மறந்து விடுகின்றனர். பதவியில் அமர்ந்த பிறகு தாங்களும் அதே துருப்பிடித்த அடக்கு முறை ஆயுதத்தையே நம்பி உயிர் வாழ முடியும் என்று நம்புகின்றனர்.

இரண்டாண்டுகளுக்கு முன்பு பீகாரில் அமோக வெற்றி பெற்ற இந்திரா காங்கிரஸ் இன்று பங்கா என்ற தொகுதியில் ஜாமீன் தொகையை இழந்து அவமானப்பட்டு நிற்பதை கருணாநிதியும், அவரது சகாக்களும் பார்க்கத் தவற வேண்டாம். அடக்கு முறையும் ஒடுக்கு முறையும். அராஜகமும் ஜனநாயக விரோதச் செயலும் இந்த நாட்டில் வெற்றி பெற்றது கிடையாது. திண்டுக்கல்லில் வெற்றி பெறப்போவதுமில்லை.

ஜனநாயகத்தில் தி மு க வுக்கு நம்பிக்கையிருந்தால் நேர்மையான—அமைதியான தேர்தலை சந்திக்க தயங்க வேண்டியதில்லை. ரவுடிசம்தான் தங்களுக்கு இலகுவாகப் பயன்படக்கூடிய கருவி என்று கருதுவார்களானால்,

எச்சரிக்கிறோம்.

மக்களது ஆதரவை இழந்த நீங்கள் அந்த மக்களது ஆவேசம் உங்களை இருந்த இடம் தெரியாமல போகும்படி செய்யும் என்று எச்சரிக்கிறோம்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களும், அ தி மு க ஊழியர்களும் ஏனைய ஜனநாயக சகோதரக் கட்சிகளின் ஊழியர்களும் உஷாராக வேண்டும்.

தி முக,வினர் தந்திரத்தைப் புரிந்துகொள்ளவேண்டும்: அமைதியான வழியில் தாங்கள் வெற்றிபெற முடியாது என்பதைப் புரிந்துகொண்டு கலகம் விளைவித்து வெற்றி பெற்றுவிடலாம் என்று தி. மு. க. வினர் திட்டம் தீட்டியுள்ளனர் என்பதை உணரவேண்டும்.

தி. மு. க. வினரின் ரவுடியிசத்தை முறியடிக்க சகல விதமான பாதுகாப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுகிற அதே சமயத்தில் அவர்களது ஆத்திரமூட்டும் திசை திருப்பும் சாகசங்களுக்கு இரையாகி விடக்கூடாது.

தி. மு க. வினரின் ஒவ்வொரு சதியையும் அம்பலப்படுத்தும் அதே சமயத்தில், அ. தி. மு க. வேட்பாளர் வெற்றி பெறுவதற்கான தேர்தல் வேலைகளிலிருந்து திசை திருப்பச் செய்யும் முயற்சிக்கு இரையாகாமல் தேர்தல் வேலைகளை சுறுசுறுப்பாகவும், தன்னம்பிக்கையுடனும் மேற்கொள்ள வேண்டுமென்று அறைகூவி அழைக்கிறோம்.

திண்டுக்கல்லில் தி. மு. க.வும், சிண்டிகேட்டும், இண்டிகேட்டும் படுதோல்வி காணச் செய்ய வேண்டும். இதுவே எதிர்கால ஜனநாயக வாழ்வை உறுதிப்படுத்தும் ஒரேவழி.

## மதுரை தாலுகாவில் மேதின விழா

மதுரை, மே. 3—

மதுரைத் தாலுகா, பி. பி. சாவடி, பொன்மேனி சொக்கலிங்கநகர், புதிய நகர், பெத்தானியாபுரம், கோச்சடை சம்மட்டிபுரம், விராட்டிபத்து, எஸ். எஸ். காலனி அரசரடி, ஒத்தகடை பாத்திமா நகர் பகுதிகளில் முப்பது செங்கொடிகளை பி பி. சாவடி கிளை தோழர்கள் சைக்கிளில், ஊர்வலமாகச் சென்று கொடியேற்று விழாவில் கலந்துகொண்டனர் எஸ். எஸ். காலனி, அரசரடி ஒத்தகடையில் தோழர் பி. என். மணியும் விராட்டிபத்து கோச்சடை, பி. பி. சாவடி தோழர்கள். பிச்சைமணி மற்றும் பல தோழர்களும் பெத்தானியாபுரம், பாத்திமாநகர் தோழர்கள் சக்திவேல், பன்னீர் கொடியேற்றி வைத்தனர் பொத்தானியாபுரம், எஸ், எஸ். காலனி, சொக்கலிங்கநகர், பகுதிகளில் ஒலிபெருக்கி ஏற்பாடு செய்யப்பட்டு மேதின வரலாறுகளை விளக்கி தோழர்கள் பேசினர் மதுமரத் தொழிலாளர், பென்னர் காக்கில் தொழிலாளர். புதிதாக பெத்தானியாபுரம் பகுதியில் உள்ள செங்கல் காளவாயில் தொழிலாளர்கள் சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கொடியேற்றுவிழாவில் பி. பி. சாவடி தோழர்கள் ஊர்வலமாகச் சென்று கலந்துகொண்டனர் தோழர் எம பிச்சைமணி கொடியேற்றி வைத்தார்.

## ஆனால் வளர்த்தது யாரை? ஏழைகளையா? ஏகபோகங்களையா?

**கடும் விலைவாசி உயர்வால் வாழ்க்கையை நடத்த முடியாமல் தத்தளிக்கும் தொழிலாளர்களும், அரசு ஊழியர்களும் சம்பள உயர்வு கேட்டுப் போராடினால் — 2 ரூபாய், மூன்று ரூபாய் கூலி வாங்கிக்கொண்டு வாழ்க்கை நடத்தும் ஏழை விவசாயத் தொழிலாளர் போன்றோரின் வாழ்க்கைநிலையை நினைத்துப் பார்த்தீர்களா? எனவே சம்பளஉயர்வு கேட்காதீர்கள் என்று பிரதமர் இந்திராகாந்தியிலிருந்து எல்லா காங்கிரஸ் தலைவர்களும், பெரு முதலாளிகளின் ஏஜெண்டுகளும் தீவிர பிரச்சாரம் செய்கிறார்கள்.**

**இவர்களுக்கு உண்மையிலேயே அந்த ஏழை மக்களின் நலனில் அக்கறை இருக்கிறதா? இல்லை. அவர்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்த ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.**

**மாறாக இருவருக்கும் பட்டைநாமம் சாத்தி பெரு முதலாளிகளைத்தான் கொழுக்க வைக்கிறார்கள். இது பற்றிய 'பீப்பிள்ஸ் டெமாக்ரசி' கட்டுரை வருமாறு:—**

கடும் விலைவாசி உயர்வால் வாழ்க்கை நடத்தமுடியாமல் தத்தளிக்கும் தொழிலாளர்களும், அரசு ஊழியர்களும்—சம்பள உயர்வு கேட்டுப் போராடினால காங்கிரஸ் அமைச்சர்களும், பெரு முதலாளிகளின் ஏஜண்டுகளும் என்ன சொல்கிறார்கள தெரியுமா?

இந்தியாவிலுள்ள பெரும்பாலான மக்கள் பரம ஏழைகளாக ஒருரூபாய், இரண்டு ரூபாய் கூலி வாங்கிக்கொண்டு வேலை செய்யும்போது, ஏற்கனவே கைநிறைய நல்ல சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கும் தொழிலாளர்களும், அரசு ஊழியர்களும் மேலும் அதிக சம்பள உயர்வு கேட்கலாமா? இது நியாயமா? இது அந்த ஏழை மக்களின் வாய்ப்புகளை பறிப்பதாகாதா? என்றும்,

### பிரதமரின் நீலிக்கண்ணீர்

தொழிலாளர்களுக்கும், அரசு ஊழியர்களுக்கும் சம்பள உயர்வு கொடுத்து பணத்தை சிதறடிப்பதற்குப் பதிலாக இந்த பணத்தை சேமித்து வைத்து நாட்டின் வளர்ச்சிப் பணிகளுக்குச் செலவிடலாமல்லவா?

இதன் மூலம் அந்தஏழை மக்களின் வசதிகளைப் பெருக்கலாமல்லவா? என்று பிரதமர் இந்திரா காந்தியிலிருந்து எல்லா காங்கிரஸ் தலைவர்களும், மறுமுனை பெரு முதலாளிகளின் ஏஜண்டுகளும் அனைவரும் தீவிர பிரச்சாரத்தில் இறங்கியுள்ளனர்.

இதன் மூலமாக போராடும் தொழிலாளர்களையும் ஏனைய பொது மக்களையும் ஒன்றுபடவிடாமல் தடுத்து அவர்களை ஒருவரையொருவர் எதிரிகளாக்கி அவர்களை தனிமைப்படுத்த ஆளும் வர்க்கத்தினர் செய்யும் சூழ்ச்சியே இது.

### பிளவுபடுத்தும் சூழ்ச்சி

உதாரணமாக பிரதமர் இந்திரா காந்தியே பல கூட்டங்களில் விவசாயத் துறையில் வேலை செய்து கொண்டிருக்கும் ஏழை விவசாயத் தொழிலாளர்களைப் பற்றி தொழிலாளர்கள் அக்கறை கொள்ளவில்லை என்று குற்றம் சாட்டி ஒருவருக்கொருவரை எதிராக தூண்டி வருகிறார்.

இவ்வாறு உழைக்கும் மக்களைப் பிளவு படுத்தி தங்களது சுரண்டலை நீடிக்கச் செய்ய ஆளும் வர்க்கத்தினர் நூற்றாண்டு காலமாக செய்துவரும் சூழ்ச்சியே இது.

ஏழை மக்களுக்காக குடம் குடமாய் கண்ணீர் வடிக்கும் இவர்களுக்கு உண்மையிலே அவர்களது நலனில் அக்கறை இருக்கிறதா? என்றால் அதுதான் இல்லை,

இன்றைக்கு தொழிலாளர்கள் அப்படி என்னதான் கேட்கிறார்கள்?

அவர்கள் கேட்பதெல்லாம் தேவையின் அடிப்படையில் குறைந்தபட்ச சம்பளம் அளிக்கவேண்டும் என்பதுதான். அதாவது உண்ண உணவு, உடுக்க உடை, குடியிருக்க சிறுவீடு குழந்தைகள் கல்வி, குடும்பத்தினரின் உடல் ஆரோக்கியத்தைப் பேண தேவையான குறைந்த பட்சவசதி ஆகியவற்றிற்குத் தேவையான குறைந்த பட்ச சம்பளம் வேண்டும் என்றுதான் கேட்கிறார்கள். மற்றபடி படோபடமான, டாம்பீக, வாழ்க்கை வசதிகளைக் கேட்கவில்லை,

இந்த தேவையான அடிப்படையில் குறைந்த பட்ச சம்பளத்தைத் தரத்தான் பெருமுதலாளிகளும் அரசாங்கமும் மறுத்துவருகிறது மூன்றாவது சம்பளக்கமிசனும் இதைத்தான் தரமுடியாது என்று மறுத்துள்ளது.

### டாட்டாவின் மறுப்பு

ஏழை விவசாயத் தொழிலாளர்களையும், மற்ற கூலி வேலை செய்து பிழைக்கும் அன்றாடங் காய்ச்சிகளையும் காட்டி—ஆலைத் தொழிலாளர்களுக்கு தேவைக்கேற்ற குறைந்த பட்ச சம்பளத்தை மறுக்கும் வேலையை பெருமுதலாளி டாட்டா சற்று வெளிப்படையாகவே செய்துள்ளார்.

அதாவது "ஒரு நாட்டில் விவசாயத்தில் அதிகம் பேர் ஈடுபட்டிருந்தால் அந்நாட்டிலுள்ளோரின் வாழ்க்கையை ஒப்பிடுவதற்கு அந்நாட்டிலுள்ள விவசாயிகளின் வாழ்க்கையே நல்ல அளவு கோலாக இருக்கும்" என்று டாட்டா பேசியுள்ளார்.

(எக்கனமிக் டைம்ஸ் 26—4—69)

அவருக்கு ஒரு நல்ல அமைப்பு வேண்டுமாம். அதாவது தொழிலாளர்கள் அதிக நுட்பம் வாய்ந்த- உயர்ந்த தரமுடைய பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டும். அதே சமயத்தில் விவசாயத்தொழிலாளர்கள் போல் ரூ,2 ரூ3 கூலியைப் பெற்றுக் கொள்ள வேண்டும், இது தான் டாட்டாவின் ஆசை.

இவ்வாறு வளர்ச்சி பெற்ற—நுட்பம் வாய்ந்த தொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களின் சம்பளத்தை, பின் தங்கிய விவசாயம் போன்ற தொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளரின் கூலியுடன் திட்டமிட்டே ஒப்பிடுகிறார்கள். இதன் நோக்கம் என்ன தெரியுமா?

தொழிலாளர்களை மேலும் அதிக சம்பளம் கேட்கவிடாமல் தடுத்து — தற்போது வாங்கும் சம்பள விகிதத்தைக் காப்பாற்றிக் கொண்டாலே போதும் என்ற நிலையை ஏற்படுத்துவதற்கான திட்டமிட்ட சூழ்ச்சியே இது.

வளர்ச்சிபெற்ற தொழில் துறை என்றால் உற்பத்தி செய்யும் இயந்திரங்களும் உற்பத்தி முறைகளும் மிகவும் தொழில் நுட்டம் நிறைந்ததாக இருக்கும். நவீன முறையில் இருக்கும்.

பின் தங்கிய தொழில் துறை என்றால் பழைய உற்பத்திக் கருவிகளும், முறைகளும் மிகப்பழமையானவையாக, நுட்பமில்லாதவையாக இருக்கும். மிகவும் பழங்காலத்தைச் சேர்ந்த உற்பத்திமுறைகளைப்பயன்படுத்துவார்கள். பின் தங்கிய தொழில் துறைக்கு விவசாயத்துறை நல்ல உதாரணமாகும்.

### முதலாளியின் சுரண்டல்

வளர்ச்சி பெற்ற தொழில் துறையில் பணியாற்றும் ஒரு தொழிலாளியைவிட தொழில் நுட்பம் வாய்ந்த நுணுக்கமான மதிப்புமிக்க பொருளை உற்பத்தி செய்கிறான். எனவே வளர்ச்சி பெற்ற தொழில்துறையில் பணியாற்றும் ஒரு தொழிலாளி அதிகம் சம்பளம் கேட்பது இயற்கையே.

அத்தொழிலாளிக்கு குறைந்த சம்பளமே அளிப்போம் என்பதன் அர்த்தம் —அவன் உற்பத்தி செய்யும் பொருளின் மதிப்பில் அவனுக்குள்ள பங்கை குறைத்து — முதலாளியின் லாபப்பங்கை அதிகப்படுத்துவது என்பதுதான்.

ஆனால், வளர்ச்சி பெற்ற தொழில்துறையில் பணியாற்றும் தொழிலாளர்கள் காங்கிரஸ் அமைச்சர்கள் பிரச்சாரம் செய்வதுபோல் அதிக சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கிறார்களா என்றால் அதுதான் இல்லை.

மத்திய ரிசர்வ் வங்கி பெரிய தொழில் நிறுவனங்களைப்பற்றிய ஒரு ஆராய்ச்சிக்கட்டுரை வெளியிட்டிருந்தது.

அதில் கடந்த பத்தாண்டுகளில் பெரிய தொழில் நிறுவனங்களில் தொழிலாளர்களின் சம்பள விகிதம் குறைந்துகொண்டே வந்துள்ளது. ஆனால் அதே சமயத்தில் முதலாளிகளின் லாப விகிதமேஅதிகரித்துக் கொண்டே போயுள்ளது என்று தெளிவாக குறிப்பிட்டுள்ளது.

இவ்வாறு தொழிலாளர்களுக்கு அவர்களுக்குரிய பங்கை அளிக்காமல் கொள்ளையடித்து பெரு முதலாளிகள்தான் மேலும் மேலும் பணக்காரர்களாக ஆகிறார்கள் தவிர —இதனால் பின்தங்கிய விவசாயம் போன்ற தொழில் துறைகளில் பணியாற்றும் கோடிக்கணக்கான ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏனையதொழிலாளர்களுக்கும் ஒரு வித பயனும் அளிக்கவில்லை. அவர்களது வாழ்வில் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை என்பதைத்தான் நம் கண்ணாலேயே பார்க்கிறோம்.

### வாழ்க்கை வசதி இல்லை

இங்கு இரு வகையான தொழில் துறைகளுமே வெவ்வேறானது. வளர்ச்சி பெற்ற தொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு சம்பளத்தைக் குறைத்து— அதனால் கிடைக்கும் அதிக பணத்தை பின் தங்கியதொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு அளிப்பதில்லை. அவர்களது வாழ்க்கை வசதிகளை அதிகப்படுத்துவதற்கும் பயன்படுத்தவில்லை.

தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு அளிக்காமல் மிச்சப்படுத்திய அந்தப் பணமெல்லாம் முதலாளியின் தொப்பை வயிற்றுக்குள்ளேதான் போகின்றதே யொழிய ஏழை மக்களுக்கு அதில் ஒரு தம்படி கூட போவதில்லை.

இவ்வாறு பின் தங்கிய தொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களைக் காட்டி தொழில் நுட்பம் வாய்ந்த தொழிலாளர்களுக்கு உரிய சம்பளத்தை அளிக்காமல் பட்டை நாமம் சாத்துவதற்கு பயன்படுத்துகிறார்கள். அதற்கு பிரதமரும், காங்கிரஸ் அமைச்சர்களும் துணை நிற்கிறார்கள்.

### கொள்ளையடிப்புக்கு காங்கிரஸ் ஊக்கம்

இந்தப் பெரு முதலாளிகள் பின் தங்கிய தொழில் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களையும் விடுவதில்லை. அவர்கள் உற்பத்தி செய்யும் பொருட்களை நியாயமான விலையில் கொள்முதல் செய்வதில்லை. அவர்களது வறுமையைப் பயன்படுத்தி மிகக்குறைந்த விலையே கொடுக்கிறார்கள். ஆனால் இதே பெரு முதலாளிகள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருட்களை இந்த ஏழை விவசாயிகளுக்கு அதிக விலையில் விற்பதன் மூலம் வேறு கொள்ளையடிக்கிறார்கள்.

இவ்வாறு இரு துறையில் பணியாற்றும் தொழிலாளர்களையும் சுரண்டி கொள்ளையடிக்கிறார்கள். இந்தக் கொள்ளைச் சுரண்டலுக்கு காங்கிரஸ் அரசு பக்க பலமாக இருந்து பாதுகாப்பும் அளிக்கிறது.

விவசாயத் துறையில் குறைந்த கூலி வாங்கிக் கொண்டு பணியாற்றும் உங்களது சகோதரர்களுக்கு உதவி செய்வதற்காக நீங்கள் அதிகம் சம்பளம் உயர்வு கேட்கக் கூடாது என்று வேண்டுகோள் விடுப்பவர்கள் எல்லாம்-முதலாளிகளுக்கு அதிக லாபம் சம்பாதித்துக் கொடுப்பவர்களே என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

தொழிலாளர்களுக்கும் அரசு ஊழியர்களுக்கும் குறைந்த சம்பளம் கொடுப்பதனால் கிடைக்கும் அதிக வருமானத்தைக் கொண்டு நாட்டின் வளர்ச்சிப் பணிகளை நிறைவேற்றலாம் என்பதெல்லாம் சுத்தப் பொய். இந்தியாவில்இதற்கு நேர்மாறாகத்தான் நடக்கிறது.

நாட்டிலுள்ள பெருமுதலாளிகள் எல்லாம் நாட்டைச் சுரண்டி ஏராளமான பணத்தைச் சேர்த்து விட்டார்கள். திட்டங்களின் பலன்களையெல்லாம் இந்தப் பெருமுதலாளிகளே அமுக்கிக் கொண்டார்கள் என்பது இன்று அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையாகும்.

இவ்வாறு கொள்ளையடித்த பணத்தைக்கொண்டு தங்களது மூலதனத்தையும் செல்வாக்கையும், பன்மடங்கு வளர்த்துக் கொண்டார்கள். என்பதும்எல்லோருக்கும் தெரிந்த ஒன்றே.

ஆனால் அதேசமயத்தில் நாட்டின் நிலை என்ன? வறுமையில் மூழ்கி மிகவும் பின்தங்கி சீரழிந்து போயிருக்கிறது.

இதற்கு காரணம்என்ன?

இந்தப் பெரு முதலாளிகள் எல்லாம் தங்களது செல்வத்தையும், சொத்துகளையும் பெருக்குவதிலேயே கண்ணாயிருப்பார்கள்.

### வித்தியாசம் ஏன்?

இவ்வாறு தங்கள் நலனிலும், வளர்ச்சியிலேயே அக்கறை கொண்டு தொழில் நடத்தி இவர்கள் வளர்ந்து வரும்போது—பல வீனமான போட்டியாளர்களையும், சிறு தொழில்களையும் நசிக்கச் செய்து விடுகிறார்கள், அத்தோடுமட்டுமில்லாமல் வளர்ச்சிபெற்ற தொழில் துறையில் மட்டுமல்லாது, பின்தங்கிய விவசாயம் போன்ற தொழில் துறைகளில் பணியாற்றும் தொழிலாளர்களையும் ஈவிரக்கமின்றி ஒட்ட ஒட்ட சுரண்டுகிறார்கள்.

எனவே தான் இன்றைக்கு ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்குமிடையேயுள்ள வித்தியாசம் அதிகரித்துக் கொண்டே போகிறது.

இதன் விளைவாகத்தான் பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகிக் கொண்டே போகின்றார்கள். ஏழைகள் மேலும் ஏழைகளாகிக்கொண்டே போகிறார்கள். இதுகாங்கிரஸ்காரர்கள்கூட ஒத்துக்கொள்ளும் உண்மையாகும்,

### நாட்டிற்கு நன்மை இல்லை

இந்தப் பெருமுதலாளிகளுக்கு முதலீடு செய்ய அதிக செல்வம் கிடைக்கச் செய்தால் அது அவர்களைத் தான் கொழுக்கச்செய்யுமே யல்லாமல் — இதனால் நாட்டிற்கு ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை. அவன் வளர்ச்சிக்கும் உதவப்போவதில்லை

மாறாக இந்தக் கொள்ளை லாப முதலாளிகளின் கையை மேலோங்கச் செய்து நாட்டு மக்களை மேலும் கொடுமையாகச் சுரண்டவே உதவும்.

அல்லது அரசாங்க ஊழியர்களுக்கு அதிக சம்பளம் கொடுக்காமல — மீதப் படுத்தப்பட்ட அதிக பணத்தைக்கொண்டு காங்கிரஸ் அரசாங்கம் என்ன செய்து கொண்டிருக்கிறது. அங்கும் இதே கதை தான்.

வளர்ச்சிப் பணிகளுக்கு ஒதுக்கப்பட்ட பணத்தைக் கொண்டு இதுவரை காங்கிரஸ் அரசாங்கம் என்ன செய்துகொண்டிருக்கிறது. இதுவரையில் மக்கள பணத்தைக் கொண்டு பொதுத்துறையில் ஆரம்பிக்கப்பட்ட தொழில்கள் எல்லாம் இந்தப் பெரு முதலாளிகள் தங்களது தொழில் சாம்ராஜ்யத்தைக் கட்டுவதற்காகவே அமைக்கப்பட்டுள்ள. அவர்களுக்குதேவையான இரும்பு. உருக்கு இயந்திரங்கள். மின்சாரம், போன்ற அதிகமூலதனம் தேவைப்படும் தொழில்களை அரசாங்கமே பொதுத் துறையில் நடத்தி — மலிவு விலையில் சப்ளை செய்து அவர்களது வளர்ச்சிக்கு பெரும் உதவி புரிந்து கொண்டிருக்கின்றனர்.

மக்களுக்கு நேரடியாக பயனளிக்கும் ஆரோக்கியம் மற்றும் சுகாதார வசதிகள், கல்வி வீட்டு வசதிகள் போன்றவைகள் பெரும்பாலும் அரசாங்கத்தால் நிராகரிக்கப்பட்டதுஎன்றே சொல்லலாம்.

பயனுள்ள பணிகளில் மக்களை அணிதிரட்டாததால் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டே போகிறது. மக்கள் மத்தியிலும் அதிருப்தி பெருகுகிறது.

### அரசு ஊழியர் சம்பள வெட்டு

இதன் விளைவாக அரசாங்கத்தின் அடக்குமுறை இயந்திரங்களான ராணுவம், போலீஸ்படை மற்ற ரகசிய உளவிலாகா போன்ற அமைப்புகளுக்கு செலவிடப்படும். தொகை எக்கச்சக்கமாக அதிகரித்துள்ளது.

ஆனால் அதே சமயத்தில் மத்திய அரசு ஊழியர்களுக்கு அரசு ஒன்றும் அள்ளிக் கொடுத்துவிடவில்லை. மாறாக அவர்களது சம்பளத்தைக் குறைத்துள்ளது.

அதாவது மத்திய அரசின் மொத்த செலவினங்களில் மத்திய அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்படும் சம்பளத்தின் விகிதம் படிப்படியாக குறைந்து கொண்டே வந்துள்ளது. அதாவது 1961-ம் ஆண்டில் மத்திய அரசின் செலவினங்களில் தனது ஊழியர்களுக்கு அளித்த சம்பளங்களின் பங்கு 33·5 சதமானமாகும்.

இந்தத் தொகை 1971ம் ஆண்டில் 28·3 சதமானமாகக் குறைந்துள்ளது.

உண்மையில் இவ்வாறு மீதப்படுத்தப்பட்ட தொகையினால் ஏழை மக்களுக்கு என்ன செலவு செய்தார்கள்? அவர்களது வாழ்வில் என்ன மலர்ச்சி ஏற்பட்டுள்ளது என்றால் ஒன்றுமில்லை.

ஆனால் இன்று நாட்டில் நிலவும் நிலை என்ன?

ஆட்சியாளர்களின் உதவியுடன் இந்தப் பெரு முதலாளிகள் சுதந்திரமாக மேலும் மேலும் தங்களது சொத்துக்களைப் பெருக்கிக் கொண்டே போகிறார்கள்

எனவே ஒட்டுமொத்தமாகப் பார்க்கையில் இந்தியாவிலுள்ள இந்த பெரு முதலாளிகள்தானவளர்ச்சியடைந்திருக்கிறார்கள்.

(4-ஆம் பக்கம் பார்க்க)

## மதுரையில் கலெக்டர் அலுவலகம் முன்பு கைநெசவுத் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

மதுரை, மே 4—

மதுரை நகர், செல்லூர் ஆகிய பகுதியில் இருந்து சுமார் 5000 கை நேசவுத் தொழிலாளர்கள் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகம் முன்பும் மே 3-ல் கைத்தறி துணி நூல் உதவி இயக்குனர். அலுவலகம் முன்பும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். தொழிலாளர் பெயருக்கு நூல் வினியோகக் கார்டு வேண்டும் என்று கோரியும் தேவைக்கேற்ப நூல் வேண்டுமென்று கோரியும் இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தப்பட்டது. இந்த ஆர்ப்பாட்டத்தில் தி. மு க. பார்வட்பிளாக் கட்சிகளைச் சேர்ந்த தொழிற்சங்கங்கள் மட்டும் கலந்து கொள்ளவில்லை. எனினும் அந்தச் சங்கங்களின் தலைமையை மீறி ஏராளமான தொழிலாளர்கள் ஊர்வலத்தில் வந்து கலந்து கொண்டார்கள்.

இந்த ஊர்வலம் செல்லூர் 60 அடி ரோட்டிலிருந்து புறப்பட்டு பாலம்ஸ்டேஷன் ரோடு வழியாக எ. டி. ஆபீஸ் கலெக்டர் ஆபீஸ் முன் ஆர்ப்பாட்டம் நடந்தது.

ஊர்வலத்தைக் கண்ட மாஸ்டர்வீவர்கள் 5—5—73 தேதி கம்பேனிகளை அடைத்து விடுவதாக பயமுறுத்துகிறார்கள். ஆர்ப்பாட்டம் நடந்தது கலெக்டர் ஆபீசில் நடந்ததைப் பற்றியும் தமிழ் நாட்டில் பல இடங்களில் தொழிலாளர்கள் பெயருக்கு கார்டு கொடுக்கப்பட்டுள்ளதையும் பற்றியும் இங்குள்ள மாஸ்டர் வீவர்கள் தொழிலாளர் பெயருக்கு கார்டு கொடுப்பதை எதிர்ப்பதை பற்றியும் அதிகாரிகள் லஞ்சம வாங்குவது பற்றியும் மதுரை ஜில்லா ஐக்கிய கைநெசவு தொழிலாளர் சங்க தலைவர் கே. அங்கமுத்து விளக்கிப் பேசினார். கூட்டம முடிவில் இறுதி வெற்றிவரை போராட தொழிலாளர்கள் அனைவரும் சபதம் எடுத்தனர்.

# தி.மு.க.வின் ஆறாண்டு கால அடக்குமுறை தர்பார்

(நேற்றைய தொடர்ச்சி)

"காலுக்குச் செருப்பும் இல்லை
கால்வயிற்று கஞ்சியில்லை"

என்று ஜீவா பாடிய பாட்டைக் காட்டி தார்ரோட்டில் சாக்கைக் கட்டிக்கொண்டு தார் போடும் தொழிலாளிக்கு "செருப்பு" கொடுத்துவிட்டதாக கூறுகிறார் கருணாநிதி.

கருணாநிதி செருப்புக் கொடுத்திருக்கலாம்; ஆனால் தம் குடும்பத்திலுள்ள எல்லோருக்கும் "கால் வயிற்றுக் கஞ்சி" வழங்கும் வகையில் சம்பள உயர்வு வேண்டும் என்ற ஜீவாதாரமான கோரிக்கைக்கு கருணாநிதி தந்த பதில் தடியடியும், துப்பாக்கிச்சூடும் தான். இது நடைமுறை அனுபவம்.

நீதி கோரும் தொழிலாளிக்கு உண்மையில் என்ன கிடைத்தது என்பதை போராடும் பொதுப்பணித்துறை தொழிலாளியும், காண்டிராக்ட் தொழிலாளியும், கட்டிடத் தொழிலாளியும் சொல்வார்கள்.

ஆனால், தார்ரோடுகளும், பாலங்களும, புதிய கட்டிடங்களும் கட்டிய தி, மு. க. காண்ராக்டர்களுக்கு கொள்ளை கொள்ளையாகப் பணம் கிடைத்தது என்பது மட்டும் மறுகக முடியாத உண்மை. இல்லை என்றால்

(கே. முத்தையா)

நடுத்தெரு நாராயணமூர்த்திகள் நவநாகரீககாரர்களின் எஜமானர்களாக எவ்வாறு பவனிவர முடியும்? லஞ்சம் ஊழல்! அதன்நாற்றமடிக்கும் வாயைத் திறந்துகொண்டு ஒவ்வொரு இடத்திலும் கைகளை நீட்டுவது இந்த நாடே நாறிப்போன நிகழ்ச்சி.

இந்த ஊழல் குற்றச்சாட்டுகளைப் பற்றி விசாரணை செய்ய மார்க்சிஸ்ட் கட்சி கூறிய ஆலோசனையை தி.மு.க. ஆட்சியாளர்கள் ஏற்க மறுத்தனர். இது அவர்கள் மீது ஏற்பட்ட சந்தேகத்தைத்தான் ஊர்ஜிதம் செய்தது.

## இது சாதனையா?

"ஒரு லட்சத்து எண்பதாயிரம் விவசாய குடும்பங்களுக்கு சாசனம் செய்துதந்தது கம்யூனிஸ்ட் கொள்கைக்கு விரோதமா" என்று கேட்கிறார் திருவாளர் கருணாநிதி. நாம் கூறுகிறோம் நிச்சயமாக விரோதமில்லை அது வரவேற்கப்படுகின்ற ஒன்று தான். ஆனால் இதை "ஒரு பெரிய சாதனை" யாகக் பீற்றிக்கொள்ள வேண்டாம். காரணம என்ன?

சேரிகளில் குடியிருக்கும் தஞ்சை விவசாயத் தொழிலாளர்கள் இன்று நேற்றல்ல. பல நூறு ஆண்டுகளாக அங்கு வாழ்கிறார்கள். ஒரு மனிதன் சாதாரணமாக ஒரு நிலத்தில் 12 ஆண்டுகள் குடியிருந்த அனுபவ பாத்தியம் உடையவனாக இருப்பானாயின் இந்நாட்டுச் சட்டப்படியே, அவனை எந்த ஆட்சியும், நீதி மன்றமும் அங்கிருந்து அகற்றமுடியாது.

பன்னெடுங் காலமாக இதே சேரிகளில், புறம்போக்குத் தரிசுகளில் வாழ்ந்திடும் அந்த அரிஜன மக்களின் குடியிருப்பு நிலத்தை முன்னர் இருந்த ராஜாக்கள் பின்னர் வந்த பிரிட்டிஷ் ஆட்சியிடமிருந்து அவர்களுக்கு தொண்டூழியம் புரிந்ததற்காக அன்றைய மேட்டுக்குடி கனவான்கள் தங்களுக்கு பட்டயங்களாகவும், பட்டாக்களாகவும போட்டு வாங்கி வைத்திருந்தார்கள்

காடுவெட்டி கழனியாக்கியது அவர்களல்ல. அந்த சேரிவாழ் அரிஜனங்களின் நீண்டகால உழைப்பில் உருவான நிலங்களுக்கருகாமையிலேயே, நீண்ட காலமாக வாழ்கிறார்கள். எனவே அவர்களை சேரிகளில் இருந்து அகற்ற முடியாது. கருணாநிதி பட்டா கொடுத்ததுபற்றி இதே நிலச்சுவான்தார்கள்கூட தங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்று பகிரங்கமாகக் கூறினார்கள். எனவே இதைக் கருணாநிதி ஒரு பெரும் சாதனையாகக் கூறுவது அவரது போலித்தனமான பல பகட்டு அறிவிப்புகளில் ஒன்று.

15 ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு மேலுள்ள நிலச்சுவான்கள் நிலத்தை கட்டாயமாக போலீசை வைத்து எடுத்து அவைகளை நிலமில்லாத ஏழைகளுக்கு கொடுத்திருந்தால், தி. மு க. சாதனை செய்தது எனக் கூறிக் கொள்ள அருகதை உண்டு.

அதைச் செய்ய முயன்றால் வடபாதிமங்கலமும் வலிவலம்தேசிகரும், ஏனைய தமிழ்நாட்டின் நிலப் பிரபுக்களும் கருணாநிதியை மறுநாளே பதவியிலிருந்து இறக்கி இருப்பார்கள்.

வடபாதிமங்கலம் தியாகராஜ முதலியார்களின் நட்புத்தான் கருணாநிதிக்கு முக்கியமானதே தவிர, பஞ்சை மனிதரின் அனபல்ல.

## குத்தகை நிலங்கள் சொந்தமாகுமா?

"குத்தகை நிலங்களை உழுபவனுக்கு சொந்தமாக்குவது கம்யூனிஸ்ட்களுக்கு விரோதமா" என்று கேட்கிறார் கருணாநிதி. பசித்தவனைப் பார்த்து "நல்ல உணவு நீ உட்கொள்வது" உனக்கு விரோதமான நா? என்று கேட்பது போன்ற பரிகாசக் கேள்வி இது. நீங்கள் கொண்டு வந்துள்ள குத்தகைதாரர் உரிமைச் சட்டத்தின்படி இதுவரை குத்தகை விசாயிகளாகப் பதிந்துள்ளது 5 லட்சம் ஏக்கர் நிலத்திற்குத்தான் பொருந்தும். மீதம் சாகுபடியில் உள்ள 1 கோடியே 45 லட்சம் ஏக்கரில் தாமே சாகுபடி செய்யும் சிறு நிலக்காரர்களை தவிர்த்து மீதமுள்ள குத்தகைச் சாகுபடி செய்யும் குத்தகைதாரர்களுக்கு அரசாங்கப் பதிவு என்ற ஏற்பாடே கிடையாது. அவர்களை குத்தகைதாரர்கள் அல்ல எனக் கூறும் வகையில், நிலச்சுவான்தார்கள் ஏற்கனவே தக்க சான்றுகளை உருவாக்கிக் கொண்டுவிட்டார்கள்.

பதிவு செய்துள்ள 5 லட்சம் ஏக்கரிலுள்ள குத்தகைதாரர் பலரை அரட்டியும் மிரட்டியும் எழுதி வாங்கிக்கொண்டும் நிலத்திலிருந்து வெளியேற்றுவதற்குநிலச்சுவான்தாரர்களுக்கு முடியாத காரியமல்ல. கருணாநிதியின் போலீசும், அதிகார வர்க்கமும் இதற்கு உதவிகரமாக இருக்கும், இன்று இருக்கிறது. எனவே மிஞ்சுவதென்ன?

இன்றுள்ள குத்தகை விவசாயிகள் கூலி விவசாயிகளாக மாற்றப்படுவார்கள் என்பதுதான். மேற்கூறிய சட்டப்படி தங்களது உரிமைகளை வலியுறுத்திப் பெறுவதற்கு குத்தகைதாரர்கள் முயன்றால் பல வெண்மணிகளை மீண்டும் உருவாக்குவதற்கு நிலச்சுவான்தார்களுக்கு இன்றைக்கு பதவியில் உள்ள அரசாங்கமும், அதிகார வர்க்கமும், போலீசும் உதவி செய்வார்கள்.

கருணாநிதி ஆட்சியின் சென்ற கால நடைமுறையும், காங்கிரஸ் ஆட்சிகளின் செயல்முறையும் விவசாயிகளுக்கு இந்த அனுபவத்தைத்தான் அளித்து வருகிறது. நிலத்திற்காக மாபெரும் எழுச்சியும், புரட்சியும் நடந்தாலன்றி விவசாயிகளுக்கு நிலம் கிடைக்கப் போவதில்லை. கருணாநிதியின் தயவினால் அது நிச்சயமாக இன்று கிடைக்கவுமில்லை, கிடைக்கப் போவதுமில்லை.

இறுதியாக ஒன்று கூறிக் கொள்கிறோம். தி. மு. க. ஆட்சியில் சென்ற ஆறு ஆண்டுகளில் நிகழ்ந்த ஜனநாயக விரோத—மக்கள் விரோத நடைமுறைகளால் உழைக்கும் விவசாயிகள், தொழிலாளர்கள், மத்தியதர வர்க்க ஊழியர்கள், மாணவர்கள் ஆகியோர்களின் எதிரியாக மாறிய காரணத்தால்தான் அது பிளவுபட்டு மிகப் பெரும்பாலோர் அ. தி. மு. க. வாக மாறினர்.

இதைச் சமாளிக்க கருணாநிதி கையாண்ட முறைகள் என்ன? தி. மு. க. வின் ஊழலை எதிர்த்தும் மாநாடுகளில் வசூலித்த பணத்திற்கு கணக்கும் கேட்ட எம், ஜி. ஆரை அவர்கள் எவ்வாறு தண்டித்தனர்? எடுத்தவுடனேயே "இவன் மலையாளத்தான் அன்னியன் இவன்யார் எங்களைக் கேள்வி கேட்க" என இனவெறியைக் கிளப்பினர். நாட்டிலே ஜனநாயக வழிமுறைகளைப் பின்பற்றாத தி. மு. க, வினர், தம் கட்சிகளுக்குள்ளேயும், ஜனநாயகத்தைப் பின்பற்ற விரும்பவில்லை. "நான் தாழ்ந்த சாதிக்காரன்; ஆகவே என்னை எதிர்ப்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள்மேல் ஜாதி ஆதிக்கத்தை உருவாக்க நினைப்பவர்கள்" என்று தன்னுடைய சர்வாதிகாரத்திற்கு எதிராகத்தோன்றும் ஒவ்வொரு எதிர்ப்பையும் மட்டந்தட்டி மடக்கினார்.

## இம்மென்றால்

இவ்வாறு,
இம்மென்றால் சிறைவாசம் ஏனென்றால்
வனவாசம்
(வி. பி. சி.யை சென்னையிலே தங்காதே
மதுரையில் தங்கு என்ற கட்டளை)
இவ்வாறு இங்கே செம்மையெல்லாம்
பாழாகி
கொடுமையே அறமாகி—
பொய்யும் சூதும் தீமையும் அரணியத்தில்
பாம்புகள் போல் மலிந்துவிட்ட பிறகு,

இதன் விளைவாக அக்கட்சிக்குள் ஏற்பட்ட மோதலின் விளைவாக—தி. மு. க. உடைந்ததன் விளைவாக மிகப் பெரும்பான்மையினர் அ. தி. மு. க.வில் சேர்ந்துள்ளனர்.

இது சென்ற ஆறு ஆண்டுகால தி. மு. க. ஆட்சியின் கொடுமைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப் போவதின் ஆரம்ப நிகழ்ச்சியாகும்.

இறுதியில் தி. மு. க.வின் வீழ்ச்சியின் கட்டத்தில் அதற்கு உயிரூட்ட திரு. கருணாநிதி பல்வேறுவிதமான சாகசங்களில் ஈடுபடுகிறார். மேதினவிழாக் கொண்டாடி கம்யூனிஸ்டு அணிகளுக்கு வேண்டுகோள் விடுகிறார். இன்னும் பல கஜகர்ணம் கோகர்ணம் போடப் போகிறார். 'சோதனை"யின் 'கொம்பை" முறித்து "சாதனை"யாக மாற்றிடும் "புலி"க்கொடி மன்னன் பரம்பரையில் வந்த புலியல்லவா?

ஆனால் இவை அனைத்தும் காலங்கடந்த முயற்சிகள். வீண் முயற்சிகள். இவைகளை முறியடிக்கும் புதிய சக்தியை மக்கள் உருவாக்க முன்வந்து விட்டார்கள். திண்டுக்கல்லில் அவரதுஜனவிரோதக்கொள்கைகளுக்கு சரியான தீர்ப்பளிக்கப் போகிறார்கள்.

மார்க்சிஸ்ட் கட்சியும், ஏனைய ஜனநாயகக் கட்சிகளும் இந்தத் தீர்ப்பை எழுதுவதில் முக்கிய பங்குவகிக்கப் போகிறார்கள். அ. தி. மு. காவை அமோக வெற்றியடையச் செய்வதின் மூலம் இதைச்சாதிக்கப் போகிறார்கள்.

# உலகமெங்கும் மேதின கொண்டாட்டங்கள்

மாஸ்கோ, மே, 1—
சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் லியோனிட். ஐ. பிரஷ்நெவ் மாஸ்கோவில் மேதினவிழா நிகழ்ச்சிகளை ஆரம்பித்து வைத்தார்.

தனது பேச்சின் ஆரம்பத்திலேயே அமெரிக்காவோடும், ஜப்பானோடும் தனது உறவு நிலைகளை அபிவிருத்தி செய்து கொள்ள விரும்புவதாகக் கூறினர்.

மேலும்அவர் தனது உரையில் "எதிர்காலத்தில் பரஸ்பர மதிப்புடைய கொள்கைகளின் மீது சோவியத்—அமெரிக்கா உறவுகளுக்கான வாய்ப்புகளை சோவியத் நாடு உருவாக்கும்" என்றார்.

நேலும் இதே நிலையைத்தான் ஜபபானைப் பொறுத்த வரையிலும் மேற்கொள்வோம். உலகத்தின் மற்ற பகுதிகளில் உள்ள நாடுகளோடு எடுக்கும் உறவு நிலையே ஐரோப்பிய நாடுகளுக்கும் பொருந்தும். ஐரோப்பியநாடுகள் மீதான இங்கிலையே பிரான்ஸ், மேற்கு ஜெர்மன் ஆகிய நாடுகளோடும் பலமாக்கச் செய்யவும், ஐரோப்பிய நாடுகளின் மாநாடு ஒன்றுக்கான நமது தயாரிப்புகளை உறுதிப்படுத்தும் என்றும்பிரஷ்நெவ்கூறினார்.

இந்த மேதினத்தில் பிரஷ்நெவ் வெளியிட்ட அமைதி பற்றிய அறிக்கையானது, கடந்த மே தினத்தில் சோவியத் ஜனாதிபதி பட்கோர்னி அமெரிக்கா மீது வெளியிட்ட கடுமையான அறிக்கையோடு முரண்பட்டு இருப்பதாக கருதப்படுகிறது.

மேதினத்தன்று பிரஷ்நெவ் பேசிய பேச்சுகள் பரந்த அளவில் டெலிவிஷனில் காட்டப்பட்டதி. மே தினத்தைமுன்னிட்டு செஞ்சதுக்கத்தில் பத்துலட்சத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்களும், விளையாட்டு வீரர்களும், ஏனையோரும் அணிவகுப்பில் பங்கேற்றனர்

### பீகிங்

பீகிங்கில் நடைபெற்ற மேதின விழாவில் பல லட்சக்கணக்கான மக்கள் மக்கள் பங்கு கொண்டனர்.

இவ்விழாவில் அமெரிக்க நடிகைகள் ஷைர்லீ மாக்லெய்ன், கேன்டிஸ் பேர்ஜென் ஆகியோர் சீனத் தலைநகரில் பல்வேறு இடங்களில்நடந்த மேதினவிழாக்களில் கலந்து கொண்டார்கள்.

பொதுவிழா என்று ஒன்று இல்லை என்றாலும் மிகப் பரவலாக மேதின விழா சீனமெங்கும் கொண்டாடப்பட்டது.

### வடவியட்நாம்

வடவியட்நாமில் பிரம்மாண்டமான படையின் அணிவகுப்போடு மேதினம் கொண்டாடப்பட்டது.

வட்வியட்நாம் ஜனாதிபதி டான்டஜ் தாஸ் கலந்து கொண்டதாக வியட்நாம் நியூஸ் ஏஜென்சி தெரிவித்தது. மேதினத்தில் அமெரிக்காவுக்கு வடவியட்நாம் எச்சரிக்கை விட்டது.

அரசாங்கத்தின் செய்திப் பத்திரிக்கையான நான்டான் தனது தலையங்கத்தில் அமெரிக்கா தனது துருப்புகளையெல்லாம்தென் வியட்நாமிலிருந்து வாபஸ் பெற்றுக்கொண்டுள்ளன. எனினும் அமெரிக்காதன்னுடைய நவீன காலனியாதிக்க முறையை கைவிட்டு விடவில்லை" எனக் கூறியுள்ளது.

### சிலி (தென் அமெரிக்கா)

சிலி நாட்டின் மத்திய தொழிலாளர் அமைப்பின் பிரமாண்டமான ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. அதில் ஜனாதிபதி அலென்டியும் பங்கு கொண்டு பொதுக்கூட்டத்தில் சிறப்புரை ஆற்றினர்.

### ஜப்பான்

ஜப்பான் நாட்டின் தொழிலாளர்கள் பல ஊர்வலங்களை நடத்தி மேதினவிழாக் கொண்டாடினர். தங்களது ஊர்வலக் கோஷங்களில் ஜப்பான் பிரதமர் ராஜினாமாச் செய்யவேண்டுமென்று முழங்கினர்.

### பாரிஸ்

கொட்டும் மழையில் பாரிசில் உள்ள இடதுசாரி அமைப்புகளைச் சார்ந்த நூற்றுக்கணக்கானவர்கள் மேதின அணிவகுப்பு நடத்தினர்.

### கிழக்கு ஜெர்மனி

மே தினச்சிறப்பைக்காட்டும் வகையிலும். ஏகாதிபத்திய எதிர்ப்பை காட்டும் வகையிலும் பெர்லினின் தெருக்களில் கிழக்கு ஜெர்மனியின் நாட்டைப் பாதுகாக்குமவீரர் படை அணிவகுப்பு நடைபெற்றது.

கடந்த 5 வருடகாலமாக' வார்சா ஒப்பந்த நாடுகளுள் கிழக்கு ஜெர்மனிதான் ராணுவ அணிவகுப்பு நடத்தியதாகக் கூறப்படுகிறது. இதனை மேற்கு ஜெர்மனிக்கு பொறுப்புதாரிகள் எனக்கூறிடும் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகள் ஒவ்வொரு வருடமும் பெர்லினில ராணுவ அணிவகுப்புக்கு எதிர்ப்புகளை தெரிவித்துக் கொண்டேயிருக்கின்றன. கிழக்கு ஜெர்மனி தனது சுதந்திர உரிமைகளை வலியுறுத்துவதை எதிர்க்கின்கின்றன.

# அ. தி. மு. க. கூட்டத்தில் தி.மு.கவினர் கல்வீச்சு 50 பேர் படுகாயம்

உசிலம்பட்டி, மே, 3—
உசிலம்பட்டியில் நடைபெற்ற அ. தி. மு. க தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் தி. மு. க. வினர் கல்லெறிந்து கூட்டம் நடைபெருமல் தடுப்பதற்கு முயற்சித்தனர்.

திண்டுக்கல் அ.தி.மு.க. வேட்பாசிர் மாயத்தேவரை அறிமுகப்படுத்தும் கூட்டம் மே. 3ல் நடைபெற்றது. அங்கு எம். ஜி ஆர். வருவதற்கு முன் தி. மு. க.வை சேர்ந்த சிலர் கல்லெறிந்து அராஜக செயல்கள் நடத்தினர்.

எம். ஜி. ஆர். வருவதற்கு முன்பே கூடியிருந்த மக்கள் மீது கற்களையும். தேங்காய் மட்டைகளையும் வீசியும், நிருபர்களின் கார்களை தாக்கியும் கலகம் விளைவித்தனர்.

எம். ஜி. ஆர். மாலை மூன்றரை மணிக்கு வந்த போது அதிக அளவில்கல்வீச்சும், ஒலிபெருக்கிகளை சேதப்படுத்துதலும் நடந்தன. இவ்வாறு நடைபெற்ற அட்டூழியங்களின் விளைவாக—கல்வீச்சின் காரணமாக சுமார் 50 பேர் படுகாயமுற்றனர். கல் எறிந்தவர்களை போலீசார் அடக்கவில்லை. கைது செய்யவும் இல்லை.

—ந. நி.

## அ தி மு க வேட்பாளருக்கு திண்டுக்கல் பார்வேர்டு பிளாக் ஆதரவு

திண்டுக்கல், மே 3—
திண்டுக்கல் உடபேர்தலில மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சி ஆதரிக்கும் அண்ணா தி மு க வேட்பா திரு மாயத்தேவருக்கு நாளுக்கு நாள் ஆதரவு சடலென பெருகிவறது.

தமிழகத்திலுள்ள பார்வர்ட் பிளாக் கட்சியின் திண்டுக்கல் கிளை அ தி மு க வேட்பாளர் திரு. மாயத்தேவரை ஆதரிக்கப்போவதாக அறிவித்துள்ளது என்று திண்டுக்கல் கிளையின் செயலாளர் அறிவித்துள்ளார்.

மத்திய அரசும், மாநில அரசும்

# லஞ்ச - ஊழலை மறைக்கின்றனர்

## எம். ஜி. ஆர். குற்றச்சாட்டு

அய்யம்பாளையம், மே. 6—
திண்டுக்கல் தொகுதியில் தேர்தல் பிரச்சார நிகழ்ச்சிகளில் கலந்துகொண்ட அ. தி. மு. க. தலைவர் திரு. எம. ஜி. ராமச்சந்திரன் இங்கு நடந்த பொதுக் கூட்டமொன்றில் பேசினர். அப்போது அவர் கூறியதாவது:—



"நான் கேள்வி கேட்கிறேன். தி, மு. க. வினர் பதில் கூறட்டும்.

டில்லி எஜமானி, டில்லி எஜமானி என்கிறார்களே! யார் அது? இந்திரா காந்தியா?

அப்படியென்றால் தைரியமாகப் பதில் சொல்லட்டும். ஏன் சோழைத்தனம்? நான் ஆளும் காங்கிரஸ் நிறுத்தியுள்ள வேட்பாளரை எதிர்த்துப் போட்டியிடுகிறேன். எங்கள் கட்சி வேட்பாளர்போட்டியிடுகிறார். அப்படியிருக்கும்பொழுது இந்திராகந்தி எப்படி எனக்கு எஜமானியாக முடியும்?

எனக்கும், இந்திரா காந்திக்குமிடையே ரகசிய உடன்பாடாம். அவரால் எனக்கு ஆகவேண்டியது என்ன? நான் எதற்காக அவரிடம் போகவேண்டும்?

உங்களுக்கு உண்மையிலேயே தைரியமிருந்தால் பகிரங்கமாகச் சொல்லுங்கள். நானும், இந்திரா காந்தியும் சதித்திட்டம் தீட்டினோம் என்கிறீர்களே. அப்படியெனில் கருணாநிதியோ அல்லது அவரது கட்சியினரோ அதைப் பகிரங்கமாகச் சொல்லுங்கள், அப்படிச்சொன்னால் மானநஷ்ட வழக்குத் தொடருவேன்" என்று கூறினர்.

விசாரணைக்கமிஷன் பற்றி பேசும்போது அவர் கூறியதாவது:—

"விசாரணைக்கமிஷன் என்னவாயிற்று? நாட்டில் உள்ள பிரச்னைகளுக்குத் தீர்வு என்ன?

மத்திய அரசைக் கேட்டால் மாநில அரசு, என்கிறார்கள். மாநில அரசைக் கேட்டால் மத்திய அரசு எனகிறார்கள். இரண்டுபேரும் சேர்ந்துகொண்டு நாடகம் ஆடுகிறார்கள் என்று சொல்ல மாட்டேன், எங்கோயோ இருக்கும் லஞ்ச ஊழலை இவர்கள் இரண்டு பேரும் மறைக்கப்பார்க்கிறார்கள்.

இலங்கையில் இந்திராகாந்தி சொல்கிறார், திண்டுக்கல்லில் வெற்றிபெறுவோம் என்ற நம்பிக்கையில் போட்டியிடவில்லை என்று. ஜனநாயக உரிமையை நிலைநாட்டவே போட்டியிடுகிறோம் என்றும் சொல்லியிருக்கிறார்.

இதற்கு என்ன அர்த்தம்? அண்ணா தி. மு க. விற்கு கிடைக்கவேண்டிய ஓட்டுகளைப் பிரித்து தி. மு. க. வுக்கு கிடைக்கச் செய்யவேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தான் இந்திரா காங்கிரஸ் போட்டியிடுகிறது. அதைப்பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை எனக் கூறினர்.

—தினமலர், 3—5—72

# ஐ.எல்.ஓ.மாநாட்டுக்கு யாரை அனுப்புவது?

## ஐ. என். டி. யூ. சி, யுடன் ஏ.ஐ.டி.யூ.சி-எச்.எம்.எஸ்.லடாய்

புதுடில்லி. மே 4—
ஜினிவாவில் ஜூன் 6-ம் தேதியிலிருந்து நடைபெறவிருக்கும் சர்வதேச தொழிலாளர் ஸ்தாபன மாநாட்டுக்கு இந்தியாவிலிருந்து யாரைப்பிரதிநிதியாக அனுப்புவது என்பதில் ஐ. என்.டி. யூ. சி. ஏ. ஐ. டி. யூ. சி. எச். எம். எஸ். ஆகியவற்றிடையே லடாய் ஏற்பட்டுள்ளது.

இந்த மூன்று மத்திய தொழிற்சங்க ஸ்தானங்களும் தொழிற்சங்க அரங்கத்தில் இணைந்து வேலை செய்ய வேண்டும் என்று முடிவு எடுத்து இம்மூன்றும் அங்கம் வகிக்கும் தொழிற்சங்க தேசியக்கவுன்சில் என்ற அமைப்பையும் உருவாக்கியுள்ளனர்.

தோன்றிய நாளிலிருந்து தொழிற்சங்கத் தேசிய கவுன்சில் ஒற்றுமையாகச் செயல்பட முடியவில்லை என்பதை இதில் சேர்ந்திருக்கும் தலைவர்களே ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது.

### லடாய் வலுக்கிறது

இங்கிலையில் ஏப். 30-ம் தேதி கூடிய ஐ. என். டி. யூ. சி., ஏ. ஐ. டி, யூ. சி. எச். எம். எஸ். தலைவர்கள் சர்வதேச தொழிலாளர் ஸ்தாபன மாநாட்டுக்கு பிரதிநிதிகள் கோஷ்டியைத் தேர்ந்தெடுப்பதில் உடன்பாடு காண முடியவில்லை என்று அறிவிக்கப்படுகிறது.

1971-ம் ஆண்டில் அனுப்பப்பட்டது போல் ஐ என். டி. யூ. சி. யைச் சேர்ந்தவர்கள் பிரதிநிதிகளாகவும் ஏ. ஐ. டி. யு. சி. யையும எச். எம். எஸ்ஸையும் சேர்ந்தவர்கள் ஆலோசகர்களாகவும் போகலாம் என்று ஐ. என். டி. யூ. சி தலைவாகள் வற்புறுத்தினர்

இதற்கு மற்றவர்கள் இணங்கவில்லை. ஒருவரிடம் ஐ. என். டி. யு. சி. பிரதிநிதியாகப் போனால் இன்னொருவரும் ஏ. ஐ. டி. யூ. சி. போக வேண்டும் என்றும், அதற்கடுத்த வருடம் எச். எம், எஸ் போகவேண்டும். இப்படி மாறி மாறி போகவேண்டும் என்றும் அவர்கள் கூறுகின்றனர். இதற்கு ஐ.என்.டி.யூ.சி. சம்மதிக்காததால் உடன்பாடு ஏற்படவில்லை.

## திண்டுக்கல் தேர்தல் வேலைக்கு கோவைத் தோழர்கள்

கோவை, மே. 3...
கோவை கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) கிளையின் சார்பாகவும், கோவை மாவட்ட மில் தொழிலாளர் சங்க பிரிமியர் பி. மில் கிளையிலிருந்து திண்டுக்கல் தேர்தல் பிரச்சாரத்திற்கு பி. நாராயணசாமி, என். சுப்பிரமனியன் ஆகிய இரு தோழர்களும் கட்சியின் ஒலிபெருக்கியை எடுத்துக் கொண்டு ஏப். 30ந்தேதியே திண்டுக்கல்சென்றுள்ளார்கள்.

பிரதம நீதிபதி நியமனத்தை எதிர்த்து

# மதுரை வழக்கறிஞர்கள் வேலை நிறுத்தம்

மதுரை, மே, 3—
சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி நியமனத்தை எதிர்த்து, கோர்ட்டுகளுக்குச்செல்லாமல் மதுரை வழக்கறிஞர்கள் அனைவரும் மே. 2-ந்தேதி வேலை நிறுத்தம செய்தனர். இதனால் அன்று அவர்கள் ஆஜராக இருந்த வழக்கு வேறு தேதிகளுக்கு மாற்றப்பட்டன.

இந்த வேலை நிறுத்தத்தில் சுமார் 600 வழக்கறிஞர்கள் கலந்து கொண்டனர். ஆனால் இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஒரு வழக்கறிஞர் மட்டும் கோட்டுக்கு வந்திருந்தார்.

காலை 11 மணிக்கு கோர்ட்டுகள் துவங்கியதும் நீதிபதிகள் ஆசனத்தில் வந்து அமர்ந்தார்கள். கிரிமினல் வழக்குகளில் ஆஜராகும் போலீசார், அரசு வழக்கறிஞர்கள், அதிகாரிகள், வக்கீல்குமாஸ்தாக்கள், குற்றம் சாட்டப்பட்டவர்கள் ஆகிய அனைவரும் கோர்ட்டுக்கு வெளியே கூட்டமாக இருந்தனர். பல வழக்கறிஞர்கள் சாதாரண உடையில் வந்து இருந்தனர். இதனால் அன்று கோர்ட் அலுவல்கள் அனைத்தும் ஸ்தம்பித்தன.

### கோவையில்

கோவையில் வழக்கறிஞர்கள் அனைவரும் வேலை நிறுத்தம் செய்ததால் ஜில்லா கோர்ட், சப் கோர்ட்டுகள் இயங்கவில்லை

"திமிர் பிடித்த சர்வாதிகார ஆட்சியின் பலி பீடத்தில் சுதந்திர நீதித்துறையை காவு கொடுக்காதீர் போன்ற கோஷங்கள் எழுதப்பட்ட சுவரொட்டிகள் நகரெங்கும் ஒட்டப்பட்டிருந்தன.

நாடு சுதந்திரம் பெற்றபின் கோவையில் வழக்கறிஞர்கள் வேலை நிறுத்தக் கிளர்ச்சி செய்வது இது தான் முதன் முறையாகும்.

இதேபோன்று, ஈரோடு, கரைக்கால், திண்டுக்கல், தஞ்சாவூர், சாத்தூர் முதலிய இடங்களிலும் வழக்கறிஞர்கள் கோர்ட்டுகளுக்குச் செல்லாமல் பகிஸ்காரம் செய்தனர்.

## பிரிட்டனில் வேலைநிறுத்தம்

லண்டன், மே. 1—
இங்கிலாந்தில் வாழ்க்கை பொருட்களின் விலைகள் பயங்கரமாக அதிகரித்துக் கொண்டே இருக்கும் அதே சமயத்தில் கூலி உயர்வு இல்லாமல் செய்துவரும் சர்க்காரின் கொள்கையைக் கண்டித்து அனைத்து பகுதி தொழிலாளர்களும் வேலைக்குச் செல்லாமல் எல்லாம் வீட்டிலேயே தங்கிதம் எதிர்ப்புகளைக் காட்டினர்.

கொழிற்சாலைகளைச்சுற்றிலும் மயான அமைதியாக இருந்தது. கிட்டத்தட்ட நாடு முழுவதும் ரயில்வே போக்குவரத்து முற்றிலும் ஸ்தம்பித்துவிட்டது.

# பிரதம நீதிபதி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பாதுகாப்பை உறுதிப்படுத்தியது என்பதிலும் கொண்டுபோய்விட்டது.

### பேங்கு, மன்னர் மானியம்

பேங்கு, மன்னர் மானிய ஒழிப்புச் சட்டம் வந்த போதும் சுப்ரீம் கோர்ட் அளித்த தீர்ப்புகளானது, முற்போக்கு உலகத்தையே அதிர்ச்சியுறச் செய்தது, அதனுடைய தீர்ப்புகள் சுயநல வர்க்கங்களுக்கே சாதகமாக அமைந்தன

பேங்குகளுக்கு நட்டஈடு கொடுப்பது பற்றியும் இந்த சுப்ரீம் கோர்ட் கொடுத்த பரிந்துரை எப்படி இருந்தது? பேங்கு முதலாளிகளுக்கு முழு நட்டஈடும் கொடுக்க வேண்டுமென்று குழைந்து குழைந்து வற்புறுத்தி பரிந்துரை செய்தது. அதாவது பேங்குகளை தேசவுடமை ஆக்கியதையே கேலிக்கூத்தாக ஆக்கும் அளவுக்கு இந்தப் பரிந்துரைகள் அருத்தமற்றதாக இருந்தன. சமீபத்தில் வெளிவந்த தீர்ப்பு கூட சொத்து உறவுகளில் தீவிர மாற்றங்களைக் கொண்டு வருவதற்கு நாடாளுமன்றத்திற்கு உரிமை உண்டு என்பதை, முழுதாக ஏற்றுக்கொள்ளவில்லை.

### சொத்துடைமைக்கு பாதுகாப்பு அளிக்கவே

நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களை செல்லத்தக்கதல்ல என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளிக்கிறதென்றால், அதனுடைய நடைமுறைப் பலனானது, பொதுவாக, ஏகபோக முதலாளிகளையும், பெரும் சொத்துடைமைக்காரர்களையும் பாதுகாப்பதாகவே இருக்கிறது. இவர்களைப் பாதுகாப்பதற்காக அரசியல் சட்டத்தில் கண்டுள்ள சமத்துவம் என்ற சொல்லையும், சொத்து வைத்துக் கொள்ளுவதற்கு அடிப்படை உரிமை உண்டு என்ற வாசகத்தையும் பயன்படுத்திக் கொண்டார்டார்கள்.

சுப்ரீம் கோர்ட்டானது சுயேச்சையாகவே இயங்குகிறது என்று கூறுகிறவர்கள் இந்த பிரத்தியட்ச உண்மைகளை முன் வைத்து ஆழமாகச் சிந்திக்க வேண்டும்.

### மார்க்சிசம் போதிப்பது என்ன?

நீதி மன்றங்களைப் பற்றியும், நீதிபதிகளைப் பற்றியும் மார்க்சிசம் போதிப்பது என்ன? அரசு என்பது ஒரு வர்க்கத்தின் இயந்திரம் என்றும், அந்த இயந்திரத்தின் உறுப்புகளாக, நிர்வாகத்துறையும், காவல்துறையும், சட்டத்துறையும் இருப்பது போலவே, நீதிபதிகளும், நீதித்துறையாக-ஏனைய உறுப்புகளைப் போன்ற ஒரு உறுப்பாக இருக்கிறது. அந்த நீதிபதிகள் வர்க்கச் சட்டங்களைத்தான் நிர்வகிக்கிறார்கள். அப்படியிருக்கும்போது, அவர்களையெல்லாம் சுயேச்சையானவர்கள் என்று பிரச்சாரம் செய்வதானது, வெறும் கற்பனையே தவிர, மெய் அல்ல.

### முரண்படவும் செய்யும் அடிப்படையை மீறும்

இப்படி நாம் சொல்லுவதினாலே, இந்த இரண்டு உறுப்புகளும்-அதாவது நிர்வாகத் துறையும் நீதித்துறையும் ஒன்றையொன்று முரண்பட்டு மோதிக்கொள்ளாது என்று அருத்தமல்ல. சில சமயங்களில் சில பிரச்னைகளில் முரண்பாடு முற்றி மோதிக் கொள்ளவும் செய்யும். ஆனால், இப்பொழுது பிரதம நீதிபதி நியமன விஷயமாக மோதிக் கொண்டிருக்கின்ற இந்தப் பிரச்னையில்கூட, இவர்களுடைய மோதல் எந்த அளவில் இருக்கிறதாம்! ஆளும் வர்க்கத்தின் அடிப்படை நலன்களை மீறி, நிர்வாகத்துறையும் போய்விடவில்லை; நீதித்துறையும் போய்விடவில்லை!

### இ. எம். எஸ். வழக்கில்...

இன்னொரு விஷயத்தையும் நாம் மனதிற் கொள்ள வேண்டும். உயர்ந்த அந்தஸ்து வசிக்கும் சில நீதிபதிகள், மார்க்சிஸ்ட் சித்தாந்தம் என்றால் என்ன என்பதைப்பற்றிகேலிக்கூத்தும்மடத்தனமுமான வியாக்யானங்களைச் செய்ய முற்பட்டதை, தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாத்துக்கு எதிராகத் தொடுகக்கப்பட்ட வழக்கில் பார்த்தோம்.

### முகமூடியை எறிந்தனர்

தனதுசொந்தக் கட்சிக்கு இஷ்டமான நபரை, நாட்டின் மிகப் பெரிய நீதித்துறை தலைவராகப் போட்டுக் கொண்டதின் மூலம் இனிமேல் நீதிபதிகளெல்லாம் அரசாங்க நிர்வாகத்தின் தேவைகளுக்கும், கோரிக்கைகளுக்கும் இணங்க கண்டிப்பாக நடந்து கொள்ள வேண்டுமென்று அடித்து பறைசாற்றுகிறது. அதாவது இதுவரை தமதுவர்க்கநீதித்துறையை சுயேச்சையானது என்று கூறி மூடுதிரை போட்டு பாவனை செய்து வந்தார்களே அந்த போலித்தனமான சுதந்திரத்தைக்கூட இனிமேல் அனுமதிக்க முடியாது என்ற அளவுக்கு ஆளும் வர்க்கங்கள் பச்சையாக வெளி வந்துவிட்டன. தனிப்பட்ட எந்தவொரு பிரச்னையிலும்கூட நிர்வாகத்துறையுடன் நீதித்துறை மோதக்கூடாது, முரண்படக்கூடாது என்று திட்டவட்டமாக தெரிவிக்கும் அளவுக்கு ஆளும் வர்க்கங்கள் அப்பட்டமாக வந்துவிட்டன.

### தலையாட்டி நீதிபதிகள்

மூத்த நீதிபதிகளைப் பின்னுக்குத் தள்ளிவிட்டதின் மூலம்,நீதித்துறைமீது மக்களுடைய மேலாதிக்கத்தை நிலைநாட்டி விட்டதாக ஆளும் கட்சி பெருமையடித்துக் கொள்ளுகிறது. ஆளும் கட்சியின் இக்கூற்றை நமது கட்சி மறுக்கிறது.

ஆளும் கட்சியின் பெருமை பீத்தலுக்குமாறாக நமது கட்சியின் கருத்து என்னவென்றால், நாட்டு மக்கள் மீது ஆளும் கட்சி தொடுக்கும்தாக்குதல்களுக்கெல்லாம் சட்டநியாயங்களைக் கூறிக்கொண்டு முழுக்க முழுக்க இசைந்து குழைந்து போகக்கூடிய ஒரு நீதித்துறையை ஏற்படுத்துவதற்காக தானடித்த மூப்பாக ஆளும் கட்சி நடந்து கொள்ளுகிறது என்பது தான் நமது கட்சியின் கருத்தாகும்.

### தலையாட்டிகள்

சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள், மக்களின் ஜனநாயகத்தையும் தனிநபர் சுதந்திரத்தையும் பாதுகாக்கும் பொருட்டு, சுயேச்சையான பாத்திரத்தை வகித்து, அரசு நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தியிருக்கிறார்களா? கட்டுப்படுத்தவில்லை என்பதுதான் நமது கட்சியின் அபிப்பிராயமாகும். கட்டுப்படுத்தவில்லை என்பது மட்டுமல்ல. அதற்கு மாறாக, மக்களின் உரிமைகள் மீது தொடுக்கப்பட்ட தாக்குதல்கள் அத்தனைக்கும், இந்த நீதிபதிகள் நியாய முத்திரை குத்திக் கொண்டு தான் இருந்தார்கள். எப்பொழுதாவது சில சுயநல வர்க்கங்களின் மீது நிதானமான தடைகளை விதிக்கும் நடவடிக்கைகளை அரசு நிர்வாகம் எடுக்குமேயானால், அப்போது இந்த நீதிபதிகள், அரசு நிர்வாகத்துடன் மோதியதையும் நாம் கண்டிருக்கிறோம்.

### நீதித்துறை எப்படி இருக்கவேண்டும்?

நீதித்துறை எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி நமது கட்சியின் கருத்து என்ன? நீதித்துறையானது, நமதுநாட்டு மக்களின் ஆர்வத்தையும் கோரிக்கைகளையும் பிரதிபலிப்பதாக இருக்கவேண்டும். ஆளும் கட்சியின் தேவைகளை நிறைவேற்றுவதாக இருக்கக்கூடாது. சுயேச்சை என்ற பேரால், மக்களுக்கும் மேலாக தம்மை இருத்திக்கொள்ள நீதித்துறையை அனுமதித்து விடக்கூடாது. மக்களால் ஆமோதிக்கப்பட்ட கொள்கைகளையும் சட்டங்களையும் அடித்து வீழ்த்தக்கூடிய அதிகாரமும் தங்களுக்கு உண்டு என்று அவர்கள் தகாத உரிமை பேசுவதையும் அனுமதித்து விடக்கூடாது.

### நாடாளுமன்றமே நீதிபதிகளை நியமிக்கவேண்டும்

ஆதலால், சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரத்தை ஜனாதிபதியின் கையிலிருந்தும் மந்திரிசபையிடமிருந்தும் பிடுங்கிவிட வேண்டியது அவசியமாகும்.

நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்குத்தான் இருக்க வேண்டும். நீதிபதிகளை நேரடியாக நியமிக்கவோ, தகாத நீதிபதிகளைக் கடிந்துரைத்து நீக்கவோ நாடாளுமன்றத்துக்குத்தான் உரிமை இருக்கவேண்டும்.

இப்படிச் செய்வதின் மூலமேதான், நீதிபதிகளுக்குக் கிடைக்கும் அதிகாரமானது மக்களிடமிருந்துதான் கிடைக்கிறது என்ற கோட்பாட்டை நிலைநாட்டமுடியும், நீதிபதிகள் நியமனத்தில் எதிர்க்கட்சிகளின் கருத்துக்களும் இடம்பெற வாய்ப்பு ஏற்படும்.

## ஏழை மக்களை...

(2-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அதற்கு மாறாக பெரும் பகுதி மக்கள் வறுமை மட்டத்திற்கும் கீழே தள்ளப்பட்டிருக்கிறார்கள்.

இந்த முதலாளித்துவப் பாதையில் நாடு முன்னேறவே முடியாது.

இதற்கு ஒரே ஒரு மாற்று வழிதான் உண்டு.

அதாவது எல்லா மக்களுக்கும் வேலை வாய்ப்பளித்து—இந்தக் கொள்ளை பெருமுதலாளிகளின் சுரண்டலை ஒழித்த ஒரு சமுதாய அமைப்புதான்—நாட்டில் வறுமை நிலை ஒழிய ஒரே வழியாகும்.

இதற்கு மாறாக இந்திரா காந்தி என்னதான் 'கரீபி ஹட்டோ' கோஷம் கொடுத்தாலும் இதே வழியைப் பின்பற்றினால் அது முதலாளிகளின் சேவையாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமும் வேண்டுமோ?

## தேர்தல் முடியும் வரை ஆளும் காங்கிரஸ் பற்றி பேச மாட்டோம்

பட்டுக்கோட்டை, மே. 3—

பட்டுக்கோட்டையில் நடைபெற்ற வலது கம்யூனிஸ்டு கட்சியின் பொதுக் கூட்டத்தில் பேசிய வலது கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாண சுந்தரம் திண்டுக்கல்லில் போட்டியிடும் அ. தி. மு. க. விற்கு ஆதரவு கொடுக்கும் அதே சமயத்தில், மே மாதம் 20-ந் தேதி வரை இந்திரா காங்கிரசைப் பற்றி எதுவும் கூறப் போவதில்லை எனக்கூறினார்.

ஆளும் காங்கிரசுக்காரர்கள் ஒரு பக்கம் சோசலிசத்தை அமைக்கப் போவதாகப் பேசிக் கொண்டு, மறு பக்கம் நிலப்பிரபுக்களையும், தொழில் அதிபர்களையும், பூர்ஷ்வாக்களையும் தட்டிக் கொடுப்பதாகவும் கூறினார்.

ஆனால் அவர்களும் தி. மு. க. ஆட்சியை அகற்றவேண்டும் எனக் கூறுகிறார்கள். ஆகவே மே. 20-ம் தேதி (தேர்தல் நடைபெறும் நாள்) வரை அவர்களைப்பற்றி யாதொன்றும் நான் சொல்ல விரும்பவில்லை. பின்பு அதைப்பற்றி பரிசீலிக்க வேண்டிய கட்டத்தில் பரிசீலிப்போம்'' என்றார்.

தினமலர்
4—5—73.

# மேதின விழா

## திருப்பூரில் 3000 பேர் பேரணி

திருப்பூர், மே. 5—

திருப்பூர் நகரில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி. ஐ. டி. யு. சங்கங்கள், சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணிக் கிளைகள் ஆகியவற்றின் சார்பில், நகரிலும், சுற்றுப்புறக் கிராமங்களிலுமாக 250 இடங்களுக்கு மேல் செங்கொடிகள் ஏற்றுவிக்கப்பட்டன.

மே விழாவை முன்னிட்டு நகர் முழுமையும், செங்கொடிகளாலும், சிகப்புத் தோரணங்களாலும், மேதினச் சூளுரை கொண்ட பேணர்களாலும், அலங்கார வளைவுகளாலும் சிறப்பான முறையில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகரின் முக்கிய பகுதிகளில் தோழர்கள் கே. எஸ். கருப்புசாமியும், கே. ஆர். கோவிந்தசாமியும் தாரை தப்பட்டைகள் முழங்க செங்கொடிகள் ஏற்றுவித்தார்கள்.

பிற்பகல் 2 மணியிலிருந்தே, நகரின் பல பகுதிகளிலிருந்தும் முன்னணித் தோழர்களும், சாக்குத் தொழிலாளர்களும், லாரிப் போக்குவரத்துத் தொழிலாளர்களும், களாஸ் தொழிலாளர்களும் அணி, அணியாகத் திரண்டு சி. ஐ. டி. யூ. தலைமைச் சங்கத்தை வந்து சேர்ந்தனர்.

மாலை 5 மணியளவில் சுமார் 3000க்கு மேற்பட்ட தோழர்கள் பங்குகொண்ட பேரணி, சி. ஐ. டி. யூ. தலைமைச் சங்கத்திலிருந்து புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகளில் மேதினச் சூளுரைகளை இடி முழக்கமென முழக்கிச்சென்ற காட்சி, மாற்றார் மருளும் வகையில் அமைந்திருந்தது.

இவ்வாறு புறப்பட்ட பேரணி இரவு 7-30க்கு நகராட்சி அலுவலகத்திற்கு அருகிலுள்ள பொதுக்கூட்டத் திடலை யடைந்தது. பொதுக் கூட்டத்திற்கு கே. ஆர். கோவிந்தசாமி தலைமை வகிக்க, தோழர்கள் கே. எஸ். கருப்புசாமி, ஜி. காளியப்பன். பொன்னுசாமி ஆகியோர், இன்றையபொருளாதார நெருக்கடியில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி. ஐ. டி.யூ. ஆகியவற்றின் பாத்திரம் குறித்தும், தொழிலாளி மக்களின் ஒன்றுபட்ட போராட்ட அவசியம் குறித்தும் சிறப்புரை ஆற்றினர்கள்.

### மே தின விழாவில் மாதர்கள் பங்கு

மதுரை, மே 3—

மதுரையில் 1—5—73ஆம் தேதி நடந்த மே தின ஊர்வலத்தில் கலந்து கொள்ள மாதர்கள் காலையிலிருந்தே ஆர்வம் காட்டினர்.

மதுரை தாலுகா ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பாக பி. பி. சாவடி பகுதி மாதர்கள் இருபத்தைந்து பேர் குழந்தைகளுடன் மார்க்ஸ், ஏங்கல்ஸ் படம் வைத்து செங்கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட இரண்டு டயர்வண்டிகளில் தயாராகி விட்டனர். மாலை 4½ மணிக்கு சமயநல்லூர் பகுதியிலிருந்து வந்த குறவன் குறத்தி மேளதாள ஆட்டத்துடன் வந்த பகுதி ஊர்வலத்துடன் பி.பி.சாவடி மக்கள் படிப்பகத்திலிருந்து பொய்க்குதிரை, சிலம்பாட்டம், சிறுவர்கள்கேளிக்கை ஆட்டம்; அதிவிமர்சையாகப் புறப்பட்டு மேலமாசி வீதியிலிருந்து புறப்பட்ட பேரணியில் கலந்துகொண்டு, இறுதியாக திலகர் திடலில் நடந்த பொதுக் கூட்டத்திற்குப் பின்கலைந்து சென்றது.

### மேதின கொடியேற்று விழா சைக்கிள் ஊர்வலம்

மேட்டூர், மே 5—

மேட்டூர் பிரதேசக் கமிட்டியின் முடிவுபடி 75 பேர் கட்சியின் உறுப்பினர்களும் ஆதரவாளர்களும் சைக்கிளில் செங்கொடியின் கீழ் மேட்டூரில் இருந்து ஒவ்வொரு இடத்திலும் ஊர்வலமாகச் சென்று கொடி ஏற்றினார்கள்.

காலை 7 மணிக்கு தோழர் அமரப்பன் மேட்டூரில், 'ஒர்க் ஷாப்'' "ஸ்பின்னிங் மில்'' ஆகிய இரண்டுஇடங்களிலும் ஏற்றிவிட்டு பிறகு சேலம் கேம்ப், மேட்டூர் ஆர். எஸ். 2. கருமலைக்கடல், குருவரெட்டியூர், கருப்புரெட்டியூர், குஞ்சாண்டியூர், ஆர். சி. பிளாண்ட், கெம்பிளாஸ்ட், புதுகாம்பள்ளி ஆகிய இடங்களில் முறையே வி. எம். நாராயணன் (ஏ ஐ டி யூ சி), எம். சீரங்கன் (சி ஐ டி யூ தலைவர்), வெள்ளையன், குஞ்சுரெட்டி, பெருமாள், வேல்முருகன், ஆர். நடராஜன் (தீக்கதிர் நிருபர் சி. ஐ டி யூ உப தலைவர்) ஆர். பெருமாள் (சி ஐ டி யூ செயலாளர், ஆகியோர் கொடியேற்றிவைத்தார்கள்.

தோழர்கள் ஊர்வலமாகப் போகும்போது வீரமிக்க கோஷங்களை எழுப்பிக் கொண்டு சென்றனர். ஏராளமான பேர்கள் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஒவ்வொரு இடத்திலும் கொடியேற்றும்போது சென்ற காலத்திய 8 மணி நேர வேலை பெற நடந்த போராட்டம் பற்றியும், அதற்கு தியாகங்கள் செய்து உயிர்விட்ட தோழர்களைப் பற்றியும் விரிவாகப்பேசினர்.

கருப்புரெட்டியூர் தோழர்கள் பகல் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்தார்கள். 75 பேர் அங்கு சாப்பிட்டுவிட்டு புறப்பட்டு ஊர்வலமாகச்சென்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

குருவரெட்டியூரில் தோழர் குஞ்சு ரெட்டியார் எல்லா தோழர்கட்கும் தேனீர் வழங்கினார்.

### குலசேகரத்தில் தோழர். ஏ. கே. ஜி.

தக்கலை, மே. 3—

குலசேகரம் அரசமூடு சந்திப்பில் தோழர் பி. பெருமாள் தலைமையில் ஏப். 27ல் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் ஏ. கே. ஜி. பேசினார்.

தமிழகத்தில் உழைப்பாளர்களின் பத்திரிகையான "தீக்கதிர்" வளர்ச்சிக்கு தொழிலாளர்களும் விவசாயிகளும் நிதி உதவி அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு 'தீக்கதிர்' நிதியை தோழர் ஜி. எஸ். மணி, ஏ. கே. ஜி. யிடம் அளித்தனர்.

தோழர்கள் ஜே. எஸ். ஹேமச்சந்திரன், ஆர். பரமேஸ்வரன், எம். எல். ஏ. என், அச்சுதன் ஆகியோர் பேசினர்.

கூட்டத்தில் திண்டுக்கல் தேர்தல் நிதி 42-75 வசூலாகியது.

கட்சி கிளைசார்பில் தேர்தல் நிதியும் மாலைகளும் ஏ.கே.ஜி.க்கு அளிக்கப்பட்டது.

5—5—73ல் குமரி மாவட்டத்தில் தோட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து தக்கலை ஆர் டி ஓ அலுவலகம், நாகர்கோவில் கலெக்டர் அலுவலகம் ஆகியவற்றின் முன் ஆர்ப்பாட்டம். போலீஸ்அடக்குமுறையைக் கண்டித்தும் தோட்டத் தொழிலாளர் நலச்சம்பளததை அமுலாக்கக் கோரியும் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

### மாடக்குளத்தில் மே தினவிழா

மதுரை, மே. 3—

மதுரைத் தாலுகா மாடக்குளத்தில் மே தின விழா சிறப்பாக நடந்தது. தோழர்கள் சி. ராமகிருஷ்ணன் இந்திரஜித், ஏ. சோமசுந்தரம் ஆகியோர் ஊர்வலமாகச்சென்று செங்கொடிகளை ஏற்றி வைத்தனர். ஊர்வலத்தில் அண்ணா தி. மு. க. வினர் உள்பட 50க்கும் மேற்பட்ட தோழர்கள் கலந்துகொண்டனர்.

பின்பு நடந்த கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர்கள் எம். நாராயணன், எம். ஆர். முருகேசன் ஆகியோரும், அண்ணா தி. மு. க. சார்பில் வி. ராமநாதன், டி. சுவாமிநாதன் ஆகியோரும் பேசினர்.

பின்பு சிறுவர்களுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

### தானத்தவம்புதூரில்

தானத்தவம்புதூரில் விவசாய சங்கத் துவக்க விழாவும், மேதினப் பொதுக் கூட்டமும் மே 2-ந் தேதி மாலை 7 மணிக்கு நடைபெற்றது. தோழர் கே. சுப்பையா செங்கொடி ஏற்றி வைத்தார்.

மாடக்குளம் விவசாயிகள் சங்கத்தலைவர் தோழர் என். நாராயணன் தலைமையில் தோழர்கள் பி. என். மணி, ஏ. துரைசாமி. இந்திரஜித், சி. கந்தன், கே.சுப்பையா, நண்மாறன் ஆகியோர் பேசினர்.

தானத்தவம் கிராமத்திற்கு ரோடு வசதி, மின் வசதியும் கோரியும். சீரான முறையில் சீனி, மண்ணெண்ணெய் வழங்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கே. எஸ். அர்த்தநாரியை தாக்க முயற்சி

### போலீஸ் வேடிக்கை பார்த்தது மேதினக் கூட்டத்தில் நடந்த சம்பவம்

மேட்டூர், ஏப். 5—

இங்கு நடந்த மேதினப் பொதுக்கூட்டத்தில் தோழர் அர்த்தநாரி பேசிக் கொண்டிருக்கும்போது மேடையில் அவரைத்தாக்க முயற்சிக்கப்பட்டது. இதைப் போலீஸார் தடுக்காமல் வேடிக்கை பார்த்தனர்.

1—5—73 அன்று மாலை 7 மணி அளவில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மே தின பொதுகூட்டம் தோழர் கே. எஸ். அர்த்தநாரி பேசுகையில் மேற்கூறிய சம்பவம் நடைபெற்றது.

அவர் பேசுகையில் முதலில் மேதின வரலாறுகளை விளக்கிப் பேசிவிட்டு மேட்டூர் வீரக்கல் புதூர் பஞ்சாயத்து நிர்வாகத்தைப்பற்றியும்,அதில் நடைபெறும் ஊழல்களைப் பற்றியும் குறிப்பிட்டு கண்டனம் செய்தார்.

அப்போது, வீரக்கல் புதூர் பஞ்சாயத்து போர்டின் தலைவர் ஆர். எஸ். கந்தசாமியின் அடியாட்களில் ஒருவர் என்று கூறப்படும் ஒரு நபர் மேடையேறித் தாக்க முயற்சித்தார். உடனே கட்சியின் ஆதரவாளர்களும் பொது மக்களும் தடுத்து அவனை அப்புறப்படுத்தி விட்டார்கள். கூட்டம் தொடர்ந்து நடைபெற்றது.

தாக்க வந்தவன் குடிபோதையில் இருந்தான். இந்நிகழச்சி நடைபெறும் போது போலீஸ்வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

பின்னர் தொடர்ந்துகூட்டம் நடைபெற்ற போது தோழர் அமரப்பன் கட்சியின் பிரதேச கமிட்டி செயலாளர், தோழர் கே. பெருமாள் சி.ஐ.டி.யூ. செயலாளர் எம். குணசேகரன் (மார்க்ஸ் மன்றம்) வி. எம். நாராயணன் ஆகியோரும் மேதினத்தைப் பற்றி விரிவாகப் பேசினார்கள். எம். ராஜகோபால் (கிளை செயலாளர் புதுச்சாம்பள்ளி) அவர்கள் கூட்டத்திற்கு தலைமை தாங்கினார்.

# தொழிலாளர்கள் வன்முறையாளராம்

## முதலமைச்சரின் அபாண்டம்

சென்னை, மே 4—

தொழிலாளர்கள் 'போராட்டங்களை வன்முறைக்குச் செல்லாமல் தடுத்து'' தொழிலாளர் நலனுக்குப் பாடுபட்டிருக்கும் அரசு தி. மு. க. அரசாம். சென்னையில் மே 1-ம் தேதி பொதுக்கூட்டத்தில் முதலமைச்சர் திரு. கருணாநிதி இவ்விதம் பேசியிருக்கிறார். இந்தப்பேச்சு முரசொலியில் (3—5—73-ல்) வெளியாகியுள்ளது.

தொழிலாளர்களா வன்முறையில் செல்லுகின்றனர்?

சிம்சன் போராட்டத்தில் சைக்கிள் செயினை சுழற்றியவர்கள் யார்?

நெய்வேலியில் இரும்புக் கரத்தை உயர்த்தியவர்கள் யார்?

காங்கிரஸ் ஆட்சியில் தொழிலாளர் போராட்டங்களை அடக்க எந்தப் போலீஸ் வந்ததோ, அதே போலீஸ்தான் தி மு க ஆட்சியிலும் வருகிறது.

தொழிலாளர் மீது வன்முறை குற்றச்சாட்டு சுமத்தும் கலைஞர் பெருமானே!

உங்களுடைய ஆட்சியில் போலீஸ் தடிகள் சுழலுவதும் துப்பாக்கிக் குண்டுகள் வெடிப்பதும் வன்முறையாகாதா?

### சம்பள உயர்வு கோரி

# பால்பண்ணை ஊழியர் வேலைநிறுத்தம்

சென்னை. மே, 4—

மாதவரம் பால்பண்ணை தொழிலாளர்கள் தங்களின் கோரிக்கைகளை வலியுறுத்தி மே15ந் தேதியன்று ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம் செய்ய முடிவு செய்துள்ளனர்.

29—5—73 மாலை அரசு பால்பண்ணைத் தொழிலாளர்கள் பொதுக்கூட்டம் பால்பண்ணையில் நடைபெற்றது.

பால் பண்ணையில் பத்து வருடங்களாக மஸ்தூர்களின் அடிப்படை சம்பளம் ரூ-15எனநீடிக்கிறது. இதை மாற்றி 'டைம்ஸ் கேல்'' ஊழியர்களாகமாற்றவேண்டும் என்ற கோரிக்கை. காங்கிரஸ் ஆட்சி முதல் தி.மு.க. ஆட்சிவரை நிறைவேற்றப்பட வில்லை. இக்கோரிக்கையும் மற்றும் லீவு வசதிகள், சட்ட விரோதமாக சர்வீஸ் வெட்டு செய்துள்ள அரசு உத்தரவை ரத்து செய்தல்.

டெய்ரிஆப்பரேட்டர்களையும், பம்பு ஆப்பரேட்டர்களையும் முதல் கிரேடுக்கு உயர்த்துதல்.

கறவை, கலப்பு தீவனப் பிரிவு, தொழிலாளிகளுக்கு தனிச் சம்பள நிலை, வேலை உயர்வு சம்பந்தமாக நிலையான கொள்கை, வேலை நீக்கப்பட்டுள்ள தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக் கொள்ளுதல் முதலிய கோரிக்கைகளை நீண்டகாலமாக வலியுறுத்தியும் அரசு நிறைவேற்றாமல் மௌனமாக இருந்து வருகிறது. எனவே அரசின் கவனத்தை ஈர்க்க ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வது என இக்கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

மே 15 அன்று ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம் செய்யப்போவது குறித்து ஒவ்வொரு தொழிலாளியும் பால்துறை அமைச்சருக்கு அஞ்சல் அட்டை அனுப்பியுள்ளனர்.

தொழிற்சங்க முடிவுப்படி மே. 15ந்தேதியன்று, அனைத்துத்தொழிலாளிகளும் காலை முதல் பால் துறை அமைச்சர் இல்லத்தின் முன்னால் உட்கார்ந்து கொண்டு அமைதி வழியில் 'தர்ணா' செய்யப்போவதையும் தொழிலாளிகள் தங்கள் கார்டில் எழுதியுள்ளனர்.

## தி. மு. க.விலிருந்து விலகினர்

திருத்துறைப்பூண்டி, மே. 4—

ஆயக்காரன்புலம்—4 தி. மு. க. கிளையில் முக்கிய பொறுப்பில் சுமார் 10 ஆண்டுகளாக பணியாற்றிய நாங்கள் இந்த அரசு ஏழை எளிய மக்களுக்கு பணி புரியாமல் முதலாளி வர்க்கத்திற்கு அடிமையாகி விட்டதால் இந்த கட்சியிலிருந்து விலகி, ஏழை எளிய மக்களுக்கு பணி புரியும் கொள்கையுடைய மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சங்கத்தில் சேர்ந்துவிட்டோம் என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம் என்று மா. முத்துராமலிங்கம் சு. இரத்தினம், இரா. சின்னையன், வெ. மா. மூர்த்தி பொ, மணியன், மா, பாலசுப்பிரமணியன், இ.கோவிந்தசாமி, மா. ஜெயராமன் மற்றும் கழக உறுப்பினர்களும் அறிக்கை விடுத்துள்ளனர்.

## நடக்க இருப்பவை

### 'வெண்மணி தீர்ப்பு' கண்டனப் பொதுக்கூட்டம்

கொளப்பாடு
கடைத் தெருவில்
6—5—73 மாலை 6 மணிக்கு
தோழர் மா. முத்துசாமி
தலைமையில்

தோழர்கள்
கோ. பாரதிமோகன்
என். மணியன்
பி வேலு
எம். வேதையன்
என். கோபால்
பி. வடிவேல்
தோழியர் கே.பஞ்சவர்ணம்
ஆகியோர் பேசுவர்

நாகைவிடிவெள்ளிகுழுவின் கலைநிகழ்ச்சி நடைபெறும்

### தாராபுரத்தில் மேதின பொதுக்கூட்டம்

8—5—73 மாலை 5மணிக்கு
தாராபுரம் கடைத்தெருவில்

தோழர்கள்
கோ. பாரதிமோகன்
பி. எஸ். சீனிவாசன்
வி. கோவிந்தன்
கே. பி. ராமாச்சாரி
எஸ். சச்சிதானந்தம்
மற்றும் பலர் பேசுவர்

### சங்கரன்கோவிலில்

9—5—73-ந் தேதி

தோழர்கள்
எஸ். கே. பழனிச்சாமி
ஆர். எஸ். முப்பிடாதி
டி. ஆர். ஆறுமுகம்
மற்றும் பலர் பேசுவர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில், [13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர். ஆசிரியர் கே. முத்தையா.